# செந்தமிழ்ச் செல்வி



உள்ளுறை




சிலம்பு-ருசா | வள்ளுவர் ஆண்டு–உ௦௧௨, ஐப்பசி Nov. '81 [பரல் – ௩.

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருசு | திருவள்ளுவர் ஆண்டு உ0கஉ, ஐப்பசி நவம்பர் 1981 | பரல் ௩ |
|---|---|---|


## தமிழ் மாநிலத்திற்கு வெள்ளிவிழா

தொல்பழந் தமிழ் நிலத்திற்குப் புதியதொரு வெள்ளிவிழா! இந்தியத் துணைக்கண்டம் விடுதலை பெற்று, மொழிவாரி மாநிலப் பிரிவு ஏற்பட்டதன் நினைவாக நிகழ்ந்த வெள்ளிவிழா! தமிழ் வழங்கும் பரப்பெல்லாம் 'தமிழ்நாடு' என்னும் மாநில அமைப்புள் வரவில்லை என்றாலும், 'தமிழ்நாடு' என்னும் பெயரால், மாநில அமைப்பு ஒன்று உருவாகிய மகிழ்வுக்கு அறிகுறியாம் ஒருவிழா! தமிழ்நாட்டு அரசின் சார்பிலே 1—11—81ஆம் நாள் கலைவாணர் அரங்கில் கவின் சிறப்புடன் நிகழ்ந்தது! இது களிப்புற வேண்டிய செய்தியே!

தமிழினம் தன் வரத்தால் பெற்ற வரம்பு நூல் தொல்காப்பியம். அது, தமிழ் எழுத்துக்கு வரம்பு நூல்! தமிழ்ச் சொல்லுக்கும் சொல்லமைதிக்கும் வரம்பு நூல்; தமிழர் பொருளியல் வாழ்வுக்கும் கலைநல மேம்பாட்டுக்கும் வரம்பு நூல்; அம்மட்டோ? தமிழ்நில எல்லைக்கும் தகவுற அமைந்த வரம்பு நூல்!

> "வடவேங்கடம் தென்குமரி
> ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகப்"

பாயிரப் பகர்ச்சியை உடையது அப் பழந் தமிழ் நூல்!

"குமரியொடு வடவிமயத்து ஒருமொழி வைத்து உலகாண்ட சேரலாதன்" சீர்மையைச் சிலம்பு தெரிவித்தாலும், "தென்குமரி வடபெருங்கல் குணகுட கடலா எல்லை" எனப் புறப்பாடல் புகன்றாலும், செந்தமிழ் வழக்குச் செழிக்க அமைந்து, மூவேந்தர் ஆளுகையில் முட்டற்று விளங்கிய தமிழ்கூறு நல்லுலகம்,

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைப் பட்டதென வரம்பு காட்டினூர் பனம்பாரனூர். இஃதவர் நெஞ்சத் தூய்மையையும் நேர்மைத் திறத்தையும் தெள்ளிதின் விளக்கவல்லதாம்.

பனம்பாரர் குறித்த வேங்கடஎல்லே,—சிலப்பதிகாரமும் நாலாயிரப் பாடல்களும், சீர்த்தி மிக்க பிற நூல்களும் குறிக்கும் வேங்கட எல்லே,—புல்லியும் ஆதனுங்கனும் நல்லேர் முதியனும் முதலானவர்களால் வழிவழியாக ஆட்சி செய்ததாகப் புறநானூறு புகலும் வேங்கட எல்லே—நமக்கு வாய்க்கவில்லே !

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை காட்டிய திருக்காளத்தி-தேவாரப் பாடல்களில் தேனெழுகப் பாடப் பெற்ற திருக்காளத்தி-நமக்குக் கிட்டவில்லே !

தீந்தமிழ்ச் சேர நாடாகத் திகழ்ந்து, செந்தமிழ்ப் பனுவல் பலவற்றுக்கு மூலவூற்ருக இருந்ததும், தமிழ்மக்களே மிகப் பெரும் பான்மையராய் வாழ்வதுமாகிய பீர்மேடு, தேவிகுளம், நெய்யாற்றங்கரை என்னும் வளமிக்க பகுதிகளும் கோவையைச் சார்ந்த சித்தூர் வட்டமும் நமக்கு எட்டாதனவாய்ப் போயின ; எனினும், 'தமிழ் மாநிலம்' ஒன்று அமைந்தது ! இழப்புப் பெரிதாயினும் பெற்ற அளவுக்கு மகிழ்வு உண்டாதல் இயற்கை தானே !

தமிழ் மாநிலம் என்னும் அமைப்பும் எளிமையாய் அமைந்து விட்டதோ ?

இந்திய விடுதலேக்குப் பாடுபட்ட பேராயக் கட்சி, மொழிவாரி மாநிலப் பிரிவினையைக் கொள்கையாகக் கொண்டிருந்தது. 'தமிழ்நாடு காங்கிரசு' என்னும் பெயராலேயே அமைப்பும் செயல் பட்டது. விடுதலே பெற்றதும் நாட்டுச் சீரமைப்புப் பணிகளில் ஊன்றி, மொழிவாரி மாநிலப் பிரிவில் ஊன்ருது இருந்தது. பல் வேறு மொழியின மக்களும் கிளர்ந்தனர் ; தென்னுடு வடநாடு என வேறுபாடு இன்றி நாடெல்லாம் அக் கிளர்ச்சி எழுந்தது. ஆந்திர நாட்டுப் பேரன்பர் பொட்டி சீராமுலு தம் உயிரைப் பணயம் வைத்து உண்ணு நோன்பு மேற்கொண்டார் ! ஆந்திரர் கிளர்ந்தனர் ! மற்றை மற்றைப் பகுதியினரும் கிளர்ந்தனர். நடுவண் அரசு மொழிவழி மாநில அமைப்புக் குழுவொன்றை அமைத்தது.

திரு. பாசில்அலி, திரு. குன்சுரு, திரு. பணிக்கர், என்பார் அக் குழுவில் இருந்தனர். அக் குழுவினர் ஈராண்டுகள் ஆய்ந்து அரசுக்கு அறிக்கை படைத்தனர். அவ் வறிக்கையில் அமைந் துள்ள முரண்களேச் சுட்டிக் காட்டி அவ்வம் மாநில மக்கள் போராடினர். உரிமையும் உடைமையும், உணர்ச்சிக் களங்களில் ஒயவிடுவது இல்லேயே !

தமிழ் நிலமாகத் திகழ்ந்த **திருத்தணி, சித்தூர்** வட்டங்களில், தெலுங்கர் முயற்சியால் எங்கும் எத்துறையும் தெலுங்கே தனிக் கோலோச்சும் நிலைமை யுண்டாயிற்று. திட்டமிட்டுக் கால் நூற்றுண்டுப் பணி அவ்வாறு செய்யப்பெற்றது. தமிழ்ப்பள்ளி இல்லை; தமிழ் ஆட்சி இல்லை; தமிழ்ச் செய்தியும் கூடத் தெலுங்கு எழுத்திலேயே தமிழ்க் குடும்பங்களில் தவழ்ந்தது. உண்மை யுணர்ந்தார் பெரியார் ஒருவர்; அவர் பெயர் **குப்புசாமி**! '**மங்கலங் கிழார்**' என்னும் புனை பெயர்ப் புகழாளர்! அவர் செயற்கரிய செய்யும் செயலாண்மையராக வீறு கொண்டு எழுந்தார். ஊர் ஊராகச் சென்று உலையாது முயன்றார்; தமிழ்மக்களைத் தட்டி எழுப்பினர்; தமிழ்ப்பள்ளிகள் தோற்றுவித்தார்; தாமே ஆசிரிய ராய் அமைந்து கற்பித்தார்; தம்மிடம் கற்றவர்களைக் கொண்டு கல்வி நிலையங்களை ஊர்தோறும் தோற்றுவித்துக் கற்பிக்கச் செய்தார். தமிழ்ப்பெருமக்களை அவ்வப்போது அழைத்துத் தமிழுணர்ச்சி ஊட்டினர். அவர்தம் அயராப் பணி 'வாளா' ஒழியவில்லை!

திருத்தணிகையையும் அதனைச் சார்ந்த ஊர்களையும் மொழி வாரி மாநில அமைப்புக்குழு, ஆந்திரத்துடன் இணைத்ததைக் கண்டு பொறுக்காது பொங்கி எழுந்தனர், திருத்தணி வட்டாரத் தமிழ் மக்கள்! தலை நின்றார் **மங்கலங் கிழார். சிலம்புச் செல்வர் ம. பொ. சி.** அந் நேர்மைப் போராட்டத்திற்கு நெஞ்சார்ந்த உதவி செய்ய முன் வந்தார்! அவர் தம் **தமிழரசுக் கழகம்** 'தமிழ் முரசம்' முழக்கி உரிமைப் போரில் ஓங்கியது! சிறை சென்றவர் பன்னூற்றுவர்! உயிரிழந்தோரும் இருவர்; பின்னே எல்லைத் தீர்வு காணத் திரு **பதாசுகர்** பொறுப்பில் அமர்த்தப்பெற்றார். இழந்து போன திருத்தணிகை தமிழகத்துக்குத் திரும்பி வந்தது! வடவெல்லைப் போராட்டம் ஈதாகத் தென்னெல்லைப் போராட்டம் என்ன ஆயிற்று?

நாம் தென் குமரி எல்லையையும் இழக்க நேர்ந்தது! அது திருவிதாங்கூர் அரசொடும் சேர்ந்திருந்தது! தமிழர்கள் கேரளத் தரசால் புறக்கணிக்கப்பெற்றனர்; இரண்டாம் தர மக்களாக நடாத்தப்பெற்றனர். கல்வித்துறை வாய்ப்பும் வேலை வாய்ப்பும் இன்றித் தவித்தனர்! உரிமை பெற்ற நாட்டு மக்களின் உள்நாட்டுரிமை இவ்வாறிருந்தது! அடக்குமுறை எவ்வளவு நாளைக்கு ஆட்சி செலுத்தும்! தமிழர் தளபதியாய் **நேசமணி** கிளர்ந்தார். உணர்ச்சி மிக்க **நாஞ்சில் தமிழர்** உயிரைப் பணயம் வைத்து உரிமைப் போரில் குதித்தனர்! 1956இல் தென் குமரி மாவட்டம் பிறந்தது! **தோவாளை, அகத்தீசுவரம், கல்**

குளம், விளவங்கோடு, செங்கோட்டை ஆகிய ஐந்து வட்டங்கள் தமிழ் மாநிலத்தொடு சேர்ந்தன. பீர்மேடும், தேவி குளமும், நெய்யாற்றங் கரையும் தோலிருக்கச் சுளை விழுங்கியதுபோல் இழந்து போயின!

மொழிவாரியமைப்பு வந்தபின்னராவது தமிழகம் தமிழ்நாடு என்னும் பெயர் இந்த மாநிலத்திற்கு வாய்த்ததா? தமிழகத்தைப் பிடித்த நோய் முடன் (சனி) விடுமோ?

'பெயரில் என்ன இருக்கிறது?' என்று ஆளும் பெருமக்கள் பேசினர்! "தமிழகம் 'தமிழ்நாடு' என்னும் பெயர் என்றுமே இருந்தது இல்லை" என்று தீர ஆய்ந்து கண்டவர்கள் போலவும் பேசினர்! இவர்கள் தெரியாதவர்களோ புரியாதவர்களோ அல்லர்! இப்படிக் கூறுவதுதான், 'பாரதத் தாயின் தவமைந்தர்' என்பதற்கு அடையாளம் எனக்கொண்டுவிட்டவர்கள்! இவர்கள் கொண்டுவிட்ட குறிகெட்ட கொள்கை, 78 நாள்கள் உண்ணா நோன்பு இருந்து, விருதைச் சங்கரலிங்கனுரை உயிரைவிடச் செய்தது! அவர் 'உயிர் ஆணி' தந்த ஊற்றத்தாலாவது எழுந்ததா 'தமிழ்நாடு?' அந்த நல்லூழ்தான் தமிழ்நாட்டுக்கு இல்லையே!

பேரறிஞர் அண்ணு ஆட்சிப் பொறுப்பேற்று அவர் எடுத்துக் கொண்ட நடவடிக்கையால் 'தமிழ்நாடு மாநிலம்' என்னும் பெயர் வாய்த்தது. சென்னை மாநிலம் தமிழ்நாடு மாநிலமாகிய விழா சென்னையில் 1—12—'68இல் நிகழ்ந்தது. தில்லி நாடாளுமன்றத்தில் இத் தீர்மானம் நிறைவேறியதற்கு நன்றி தெரிவித்தது. அறிஞர் அண்ணு கலந்துகொண்டு நன்றியுரைத்தார்! எந்நிலையில்? அமெரிக்காவில் அறுவை மருத்துவம் செய்துகொண்டு தாய்த் தமிழகம் திரும்பியபின் முதல் நிகழ்ச்சியாக! "இந்த நல்ல விழாவில் கலந்துகொள்ளாமல் நான் இருந்து ஆவது என்ன?" என்னும் உருக்கையும் உருக்கவல்ல உருக்கமிக்க முன்னுரையுடன்!

தமிழ் மாநிலம் என்று சொல்ல இன்று எளிமையாக இருக்கலாம்! இதனுள் பொதிந்துள்ள பின்னணி, ஒருபெருங் காவியம் என்பதை எவரும் மறக்கவோ, மறைக்கவோ இயலாது!

> "தண்ணீர்விட் டோவளர்த்தோம்"

என்று எண்ணிப் பார்க்க வேண்டும் செய்தி இது!

> "எண்ணமெலாம் நெய்யாக எம்முயிரின் உள்வளர்ந்த
> வண்ண விளக்கிஃது"

என்று தெளிய வேண்டிய செய்தி இது!

இரும்பூது மிக்கது தமிழ் மாநிலம்! பூரிப்புமிக்கது தமிழ் மாநில வெள்ளிவிழா!

தமிழ்நாடு மாநிலம் வெள்ளிவிழாக் காணட்டும்! பொன் விழாக் கொள்ளட்டும்! மணிவிழாவும் வயிர விழாவும் வாய்க்கட்டும்! 'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு' பாடட்டும்! இவற்றுக்கெல்லாம் முற்பட வேண்டத்தக்கது தமிழர் தமிழராக இருத்தல்! தமிழர் ஒன்று படுதல்! தமிழரே தமிழரை அழிக்கத் தருக்காமை! தனி ஒருவர் வாழ்வினும் தமிழ் வாழ்வும் தமிழின வாழ்வும் தலையாயவை என்று நெஞ்சார உணர்ந்து நேயப் பணிபுரிதல்! தமிழ் மாநில வெள்ளிவிழா இந் நினைவுகளை எழுப்பி நிலைபெறுத்துமாக!

---

## ஞாலத்தை வெல்கின்ற நாதம்

### [கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம்]

தெள்ளுதமிழ் அருவியினை வழிமறித்துத்
திருப்பினையோ வானகத்தே, கால தேவா!
வெள்ளமெனப் பொங்குகவி வேகம் தன்னை
விண்கங்கை ஆக்கினையோ? உள்ளம் எல்லாம்
அள்ளுகவி வள்ளல்எங்கள் கண்ண தாசன்
அரசவையின் பெருங்கவிஞர் ஆவி தன்னைக்
கொள்ளையிட எத்தனைநாள் காத்திருந்தாய்?
கொடும் இயற்கை எனும்கூற்றே கூறுவாயே!
சாவென்னும் தத்துவமே உனக்கும் ஓர்நாள்
சாவுவந்து சேராதோ எனவே சாடி
ஏவுகணை விட்டகவி கண்ண தாசன்
இன்னுயிரைக் காவுகொண்ட சாவே! நீசொல்!
பூவுலகில் அவனைப்போல் கவிதைஇன்பம்
பொங்கிவரச் செயும்புலமை எவரே பெற்றார்!
நாவினிலே முழங்கும்அவன் பாடல் எல்லாம்
ஞாலத்தை வெல்கின்ற நாதம் அன்றோ?
கண்ணான கவிக்குயிலே! அமெரிக் காவின்
காற்றினிலே தமிழ்மூச்சைக் கலக்கும் தியாகம்
பண்ணுதற்கே பறந்தாயோ! மக்கள் கொண்ட
பாசத்தை மறந்தாயோ? இதயம் ஈர்க்கும்
பண்மணக்கும் சொல்லெடுத்து நீதொடுத்த
பாமாலை அத்தனைக்கும் பரிசாய் எங்கள்
கண்ணீரே மாலையெனச் சூட்டு கின்றோம்
கவிவடிவில் வாழ்ந்துபுகழ் காட்டு வாயே!

# புவிமக்கள் போற்றிய கவியரசு

பாவலர் பாரதி, பாவேந்தர் பாரதிதாசன் ஆகியோருக்குப் பின் இருபதாம் நூற்றாண்டில் ஈடிணையற்ற கவிஞராகத் திகழ்ந்தவர் கவிஞர் கண்ணதாசன். ஆத்திகம் பாடி அதன்பின் நாத்திகம் பாடியவர் பாரதிதாசன். நாத்திகம் பாடி, அதன் பின் ஆத்திகம் பாடியவர் கண்ணதாசன். படப்பாட்டுத் துறையில் பல்லவியைப் பாடியவர் பாவேந்தர். அதைத் தொடர்ந்து அநுபல்லவியையும் சரணத்தையும் பாடிப் படப்பாட்டுத்துறையின் உச்சியை எட்டிப் பிடித்தவர் கவிஞர். பாடியவர் குரலினிமையாலே பாட்டுத்திறம் சிறந்த நிலை மாறி அதன் பொருளாழச் சிறப்பினால் நயம் சிறக்கும் நிலையை ஏற்படுத்தியவர் கவிஞர். படப்பாடல் ஒரு பாமரனின் பொழுதுபோக்கு இலக்கியம் என்ற எண்ணம் மாறிப் பண்டாரகர் பட்ட ஆய்வுப் பொருளாக உயர்ந்தது கவிஞரால்தாம்.

குழப்பங்களின் மொத்த உருவமாகப் பிறருக்குத் தோற்றமளித்த கவிஞர் தமக்குள் தெளிவான நிலையைப் பெற்றிருந்தார். தம் மணத்தால் மாற்றான் தோட்டத்தையும் மணக்கச்செய்த மல்லிகை அவர். அவர் சார்ந்திருந்த கட்சியினரைவிடச் சாராதிருந்த கட்சியினரும் போற்றும் நிலையை ஏற்படுத்திக் கொண்டவர்.

எப்போதும் சிரித்தமுகம், எதற்கும் அஞ்சாத எடுப்பான தோற்றம், பிறர் துயர் கண்டால் கலங்கும் உள்ளம், பெருந்தலைவர்கள் பிரிவென்றால் தாமும் அழுது, தம் கவிதையால் மக்களையும் அழச்செய்த கவியுள்ளம், கண்டதைக் கண்டவாறு கூறிய துணிவு, போற்றுபவர் போற்றினும் தூற்றுபவர் தூற்றினும் எண்ணியதை எழுதிய எழுத்தாற்றல், முன்னுக்குப் பின் முரணையிற்றே என்றெண்ணாது அவ்வக்காலச் சிந்தனைகளை ஆணித்தரமாக மக்கள்முன் வைத்த திறன், கதை, கவிதை, காப்பியம், நாடகம், புதினம் அரசியல் கட்டுரைகள், மொழியாக்கம், இதழ் நடத்துதல் போன்ற பல துறைகளில் சிறந்து விளங்கிய இலக்கியப் பேராற்றல்—இவ்வாறு பல்வகைப் பண்புகளும் பல துறையாற்றல்களும் பெற்றுத் தனிப் புகழுடன் திகழ்ந்த கவியரசு—இந்தப் பூமியில் நிலையாய் வாழ்ந்தவர் யாரென்று கேட்டவர்—சாகவே உனக்கொருநாள் சாவு வந்து சேராதோ என்று எமனையே எதிர்த்துக் கேள்விக்கணை தொடுத்தவர் இன்று நம்மிடையே இல்லை. தம் பாட்டுத் திறத்தாலே உலகம் பாலித்திட வைத்தவர் இன்று மறைந்துவிட்டார்.

கவியரசர் தம்முடைய கவிதைகளைப்பற்றித் தாமே கூறியுள்ளது : ''அவற்றில் அரசியல் அதிகம், போற்றுதலும் தூற்றுதலும் அதிகம், தனி மனித வழிபாடுகள் அதிகம், மரண அவலங்கள், ஓலங்கள் அதிகம், செய்திக் கவிதைகள் அதிகம், சிறுமொழித் தாக்குதல்கள் அதிகம், ஆயினும் அவை காலத்தின் கணிதங்கள்,'' இவ்வாறு காலத்துக்கேற்ற கருத்துக்களைத் தம் கவிதைகளில் வடித்துத்தந்த கவியரசு மறைந்துவிட்டார்.

ஊர்க் கவிஞராகி, தேசியக் கவியாக உயர்ந்து உலகக் கவியாகப் புகழ்பெற அமெரிக்க நாட்டிற்குச் சென்ருர். எடுத்த பணி முடிக்குமுன் இறவாப் புகழுடன் இயற்கை எய்திவிட்டார். தமிழன்னை ஒரு தலையாய கவிஞனை இழந்து வருந்துகிருள்.

## அவன் பாட்டை எழுந்துபாடு*

### கவியரசு கண்ணதாசன்

பாரியொடும் கொடைபோகப் பார்த்தனொடும்
கணைபோகப் படர்ந்த வல்வில்
ஓரியோடும் அறம்போக உலகமறை
வள்ளுவனோ டுரையும் போக
வாரிகறுங் குழல்சூடும் மணவியொடும்
சுவைபோக மன்னன் செந்தீ
மாரியொடுந் தமிழ்போன வல்வினையை
என்சொல்லி வருந்து வேனே!

தேனூர்செந் தமிழமுதைத் திகட்டாமல்
செய்தவன்பெய் தீயில் வேக
போனறபோ கட்டுமெனப் பொழிந்ததிரு
வாய்தீயிற் புகைந்து போக
மானூர்தம் முத்தமொடும் மதுக்கோப்பை
மாந்தியவன் மறைந்து போக
தானேஎன் தமிழினிமேல் தடம்பார்த்துப்
போகுமிடம் தனிமை தானே!

பாட்டெழுதிப் பொருள்செய்தான் பரிதாபத்
தாலதனைப் பாழுஞ் செய்தான்
கேட்டமுத பிள்ளைக்கோர் சிறுகோடும்
கீறுமற் கிளைமு ரித்தான்

---

* கவியரசு தாம் இறந்துவிட்டால் மற்றவர்கள் எப்படி எழுதுவார்கள் என்று தமக்குத்தாமே பாடிக்கொண்ட இரங்கற்பா: கண்ணதாசன் கவிதைகள், தொ. 4, பக். 115-118.

நாட்டமுகை கேளாமல் நந்துயரும்
　　காணுமல் நமனெனும் பேய்
சீட்டெழுதி அவன்ஆவி திருடியதை
　　எம்மொழியாற் செப்பு வேனே!

பொய்யரையும் இசைபாடிப் புல்லரையும்
　　சீர்பாடிப் புகழ்ந்த வாயால்
பெய்யரையும் வசைபாடி வேசையையும்
　　இசைபாடி விரித்த பாவி
கையரையும் காசின்றிக் கடைநாளில்
　　கட்டையிலே கவிழ்ந்த தெல்லாம்
பொய்யுரையாய்ப் போகாதோ புத்காவி
　　கொண்டவன்தான் புறப்ப டானே!

போற்றியதன் சிலைவனிடம் போகின்றேன்
　　என்றவன்வாய் புகன்ற தில்லை
சாற்றியதன் தமிழிடமும் சாகின்றேன்
　　என்றவன்வாய் சாற்ற வில்லை
கூற்றுவன்தன் அழைப்பிதழைக் கொடுத்தவுடன்
　　படுத்தவனைக் குவித்துப் போட்டு
ஏற்றியசெந் தீயேநீ எரிவதிலும்
　　அவன்பாட்டை எழுந்து பாடு!

———

## எந்தநாள் காண்போம் இனி?

[கவிஞர் மேலார்க்கோடு கே. எஸ். அப்துர் ரகுமான்]

(வெண்பா)

பண்ணில் தமிழமுதைப் பக்குவமாய் ஊட்டியவன்
பண்ணுய் உருவெடுத்தான் பாட்டுலகில் — கண்ணதாசன்
சிந்தனையைத் தூண்டிவிட்டுச் சாவுலகை வென்றுவிட்டான்
எந்தநாள் காண்போம் இனி?



கவிஞர் கண்ணதாசன்

தோற்றம் : 24-6-1927 மறைவு : 18-10-1981

# கவிஞர் கண்ணதாசன் வரலாறு

அமெரிக்காவிலுள்ள டெட்ராய்ட் நகரில் நடைபெற்ற உலகக் கவிஞர்கள் மாநாட்டில் கலந்துகொள்வதற்காகச் ஜூலை மாதம் முதல் நாளன்று அமெரிக்கா சென்றிருந்த கவி அரசு கண்ணதாசன் அவர்கள் நெஞ்சுவலி காரணமாக சிக்காக்கோ நகரிலுள்ள ஹோலி கிராஸ் மருத்துவ விடுதியில் ஜூலை 24 ஆம் நாள் சேர்க்கப்பட்டார். அங்கு ஏறக்குறைய மூன்று திங்கள் மருத்துவம் செய்யப்பட்டும், பயனின்றி, கடந்த 18—10—81 அன்று அவர் தமது 55ஆவது அகவையில் காலமானார் என்ற செய்தி அறிந்து வருந்துகிறோம்.

திரு. கண்ணதாசன் 1927ஆம் ஆண்டு ஜூன் மாதம் 24 ஆம் நாள், இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள சிறு கூடல்பட்டி என்னும் சிற்றூரில், சாத்தப்பச் செட்டியார், விசாலாட்சி ஆச்சி ஆகியோரின் மகனாகப் பிறந்தார். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் முத்தையா என்பதாகும். பள்ளிக் கல்வி என்ற அளவில் இவர் எட்டாம் வகுப்புக்கு மேல் படிக்கவில்லை. படிக்க வசதியின்றிப் பள்ளிப் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்தாரேனும கண்டதைக் படிக்கப் பண்டிதனாவான் என்ற பழமொழிக்கேற்ப இவர் தாமே தமிழ் இலக்கியங்களையும், பிற நூல்களையும் பயின்று நல்ல புலமை பெற்றார். அத்துடன் பேசுவதிலும் எழுதுவதிலும் பேரார்வ முடையவரானார். இங்ஙனம் எழுத்து—பேச்சு—கவிதைத்துறை ஆகிய அனைத்துத் துறைகளிலும் தனிச்சிறப்புப் பெற்று 37 ஆண்டு களில் பெருமளவு தமது குறிக்கோளை எட்டிவிட்டார் என்றே சொல்ல வேண்டும்.

திரு கண்ணதாசனின் இலக்கிய ஆர்வத்தையும் எழுத் தாற்றலையும் கவிதை உள்ளத்தையும் உணர்ந்து முதன்முதல் இவரை இலக்கிய உலகிற்கு அறிமுகப் படுத்தியவர் கலைமாமணி நாரண துரைக்கண்ணனவர்கள் ஆவார் எனலாம். திரு. நாரண துரைக்கண்ணனவர்கள் தாம் ஆசிரியராக விருந்த 'ஆனந்த போதினி' 'பிரசண்ட விகடன்' ஆகிய இதழ்களில் கண்ணதாசனின் கட்டுரை, கவிதைகள் இடம்பெறச் செய்து ஊக்க மூட்டினார். அதன் பிறகே அவர் தம் பரிந்துரையின் பேரில், புதுக்கோட்டை இராமச் சந்திரபுரத்திலிருந்து வெளிவந்த 'திருமகள்' என்னும் இதழுக்குத் துணை ஆசிரியரானார். சில காலத்திற்குப்பின் அவ்விதழ் நின்றுவிடவே, இவர் சென்னைக்கு வந்து பல தமிழறிஞர்களுடனும், பெருமக்களுடனும் தொடர்பு கொண்டு இதழ் எழுத்தாளராகவும் பேச்சாளராகவும் புகழ் பெற்றார். தமது 26 ஆம் அகவையில் 'தென்றல்' என்ற இதழைத் தொடங்கி தாமே நடத்தி வந்தார்.

1946 இல் திரைப் படங்கட்குப் பாடல்கள் எழுதத் தொடங்கி இதுகாறும் 5 ஆயிரத்துக்கு மேற்பட்ட திரைப்படப் பாடல்களையும், பக்திப் பாடல்களையும் எழுதியுள்ளார். 4 ஆயிரத்துக்கு மேற்பட்ட தனிக் கவிதைகளையும், 21 புதினங்கள் உட்படப் பல நூல்களையும் எழுதியுள்ளார்.

இவர் நாட்டு ஒருமைப் பாட்டை வளர்க்கும் பாடல்கள் எழுதியமைக்காக 1970இல் இவருக்கு நாட்டு (தேசீய) விருது வழங்கப் பட்டது. சிறந்த திரைக்கதைப் பாடலாசிரியருக்குரிய விருதினை 1971இல் மாநில அரசு வழங்கிச் சிறப்பித்தது. 1978இல் தமிழக அரசு இவரை அரசவைக் கவிஞராக அமர்த்திற்று.

இவர் சொந்தமாகச் சில திரைப் படங்களை எடுத்தும், சில படங்களில் தாமே நடித்துமிருக்கிறார். கலைஞர் அவர்களின் தொடர்பால் 1953 ஆம் ஆண்டில் அரசியலில் ஈடுபட்டுப், போராட்டங்களில் கலந்து சிறை ஒறுப்பினையும் ஏற்றார். எனினும் அரசியலில் நிலைத்த கொள்கையினராக இராமல் 1961 தமிழ்த் தேயசீக் கட்சி, பின்னர்க் காமராசருடன் தொடர்பு கொண்டு காங்கிரசுக் கட்சி என்று பல கட்சிகளில் சேர்ந்து இறுதிக் காலத்தில் அரசியலை விட்டு விலகியுமிருந்தார்.

இங்ஙனம் பல்துறை ஆற்றலும் பட்டறிவும், கவிதையாற்றலும் மிக்குடையராய்க் குறுகிய காலத்தில் மிகு புகழ் பெற்று மறைந்த கவிஞர் கண்ணதாசனின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## இனிய நண்பா! ஏன் பிரிந்தாய்!

[கலைஞர் மு. கருணாநிதி]

என் இனிய நண்பா
இளவேனிற் கவிதைகளால்
இதய சுகம் தந்தவனே! உன்
இதயத் துடிப்பை, ஏன் நிறுத்திக் கொண்டாய்!
தென்றலாக வீசியவன் நீ—என் நெஞ்சில்
தீயாகச் சுட்டவனும் நீயே! அப்போதும்
அன்றிலாக நம் நட்பு நிகழ்ந்ததேயன்றி
அணைந்த தீபமாக ஆனதேயில்லை நண்பா!
கண்ணதாசா! என்
எண்ணமெல்லாம் இனிக்கும் நேசா!
கவிதைமலர்த் தோட்டம் நீ!—உன்னைக்
காலமெனும் பூகம்பம் தகர்த்துத்

தரைமட்டம் ஆக்கிவிட்டதே!

. . . . . . . . . . . . .

என் நண்பா!
இனிய தோழா!
எத்தனையோ தாலாட்டுப் பாடிய உன்னை
இயற்கைத்தாய் தாலாட்டித் தூங்க வைத்தாள்!
எத்தனையோ பாராட்டுப் பெற்ற உனக்கு
இயற்கைத்தாயின் சீராட்டுத்தான் இனிக்கிறதா?
எனை மறந்தாய்! எமை மறந்தாய்!
உனைமறக்க முடியாமல் உள்ளமெலாம் நிறைந்தாய்!

நன்றி : முரசொலி.

## சொல்லாழத் திரைக்கவி

[புலவர் சோம. இளவரசு

தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்]

கம்பனுக்கும் பாரதிக்கும் பின்னே மற்றோர்
　　கவிஞனிங்கே பிறப்பானா என்ற ஏக்கம்
நம்நாட்டில் அறிஞரிடை சூழ்ந்த போது
　　நானென்று வந்தவனே! கண்ண தாச!
தமிழகத்தின் அரசவைக்குக் கவிஞன் என்னும்
　　தகுதிதந்து சிறப்பித்தார்! தமிழால் என்றும்
எமையெல்லாம் மூழ்குவிப்பாய் எனநினைத்தோம்!
　　எரிமூழ்கச் செல்கின்றாய் என்ன செய்வோம்!

காடுவரை சுற்றமெனப் பாடுவாயே!
　　கவியரசே உன் இறுதிப் பயணம் பார்த்தால்
நாடுவரை சுற்றத்தைக் காணுவாயே!
　　நாதியினித் தமிழ்க்கவிக்கு யாரே என்று
பாடுவதைக் கேட்காமல் படுத்து விட்டாய்!
　　பாவிமகன் எமனுக்குச் சாவு வந்து
கூடாதோ எனக்கேட்டாய்! யமனோ இன்று
　　கொதித்தெழுந்து பழிதீர்த்துக் கொண்டு விட்டான்!

பல்லாக்குப் புதிதாக வாங்கப் போகிப்
　　பாதியிலே தனிமரமாய்த் திரும்பி வந்த
சொல்லாழத் திரைக்கவியைத் தந்த செல்வா!
　　சொர்க்கபுரி அமெரிக்கா பார்க்கச் சென்று
மல்லார்த்த உடலோடு வருகின்றாயே!
　　மகராசன் நலமாக வருவான் என்றே
எல்லாரும் நினைத்தோமே! எங்கள் எண்ணம்
　　ஏமாற்றி விட்டாயே! என்ன செய்வோம்!

பார்புகழும் நேருமகன் பெரியார் அண்ணு
பைந்தமிழன் காமராஜ் பட்டுக் கோட்டை
யார்இறந்து போனாலும் தேம்பு வாயே!
யார்இனிமேல் இவ்வாறு புலம்பு வார்கள்
தேர்போல நடப்பாயே! தெருக்கள் எங்கும்
தேன்போல இனிக்கின்ற உன்றன் பாடல்
ஊர்கோலம் வரக்கண்டு மகிழு வாயே!
ஊர்வலமாய்த் தனிப்பயணம் செல்லு கின்றாய்!

அழுவதற்குப் பிறந்தவனே! நாங்கள் எல்லாம்
அழவைத்து மௌனத்தில் ஆழ்ந்து விட்டாய்!
எழுபிறப்பில் வாய்க்காத திறமை யெல்லாம்
எடுத்தஒரு பிறப்பினிலே காட்டி விட்டாய்!
தொழுவதற்கும் பாட்டெழுதிப் பக்தி தந்தாய்!
தோகையரின் மார்பிணேயே சுகமாய் எண்ணி
விழுவதற்கும் பாட்டெழுதி இன்பம் ஈந்தாய்!
விரக்திவந்து சென்றாயே! என்ன செய்வோம்!

யாருக்கும் வாய்க்காத தோற்றம்! எந்த
எமனுக்ும் அஞ்சாத நெஞ்சம்! சொந்தப்
பாருக்குத் தீங்கென்றால் பாடும் உள்ளம்
பரிமளக்கும் ரோஜாப்பூ மேனி வண்ணம்!
தேருக்குப் பொட்டிட்ட காட்சி போலத்
திகழ்கின்ற குங்குமமே ஒளிரும் நெற்றி!
நேர்சொல்ல உவமையிலாக் கண்ண தாச!
நிலம்உள்ள காலம்வரை நிலைத்து நிற்பாய்!

## "பைந்தமிழ்க் காவிரி பாலா ரூனதே!"

[வேலூர் ம. நாராயணன் எம்.ஏ.,
இந்திய அரசு வைப்பகம், வேலூர்.]

(நிலைமண்டில ஆசிரியப்பா)

"உலகியல் காட்டில் உயரப் பறந்து
நான்மரக் கனிகள் நாளும் சுவைத்து
செம்மொழி வல்லதன் சிந்தனைக் குயிலிடும்
கருத்து முட்டையை முறையாய்த் தொகுத்து
நெஞ்சக் கூட்டினில் நன்கடை காத்து
காலம் முழுதும் 'கவிதைக் குஞ்சினை'
இலக்கிய உலகிற் கீந்து மகிழ்ந்தவோர்

எண்ணக் குவியல்; இன்னிசைத் தென்றல்;
கம்பன் தோன்றல்; 'கண்ண தாசனைக்'
காலன் நச்சியே கவர்ந்து சென்றதால்
பாட்டுக் காவிரி பாலா றுனதே!''

## வாய்மூடி விட்ட தென்ன!

[கொடுமுடி. கவிஞர் க. அ. பிரகாசம்]

உலவிவரும் காற்றினில் ஒலித்துவரும் பாட்டினில்
உன்பாடல் சரிபகுதி யாம்
உயர்வான வழியினில் ஒளிகாட்டிச் செல்கின்ற
உன்பாட்டுக் கிணையில்லையே!

கலகலெனப் பொழிகின்ற பொற்காசு மழையாகக்
கவிதைமழை பொழிந்து வந்தாய்!
கவினான இலக்கியக் கருவூலம் பலவாகத்
தமிழன்னைக் களித்துவந்தாய்!

இலங்கிடும் திரைப்பாடல் துறையிலொரு கலங்கரை
விளக்கமாய் விளங்கி நின்றாய்!
இதயத்தை அசைத்திடும் தத்துவப் பொருள்களை
இசையோடு கலந்து தந்தாய்!

வலமான தமிழ்க்கவி வாரியே நீயின்று
வாய்மூடி விட்ட தென்ன—
வளமான அரசவைக் கவிகண்ண தாசனே
வானுலகம் போய்ப்புகுந்த தயே!

———

## பிழை திருத்தம்

செந்தமிழ்ச் செல்வி சிலம்பு ருசு, பரல் உ பக்கம் சுக இல் 19ஆவது வரியில் ஈட்டுரை என்று இருக்க வேண்டிய சொல் கட்டுரை எனத் தவருக அச்சாகிவிட்டது. அதனை ஈட்டுரை என்று திருத்திப் படிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேம்.

# திருமெய்யம் குடைவரைக் கோயில்கள்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருஷ்ண சாலை, சேலம்-7]

புதுக்கோட்டையினின்றும் சுமார் 13 மைல் (20கி.மீ.) தொலைவில் திருமெய்யம் என்னும் ஊர் உள்ளது. இஃது இந் நாட்களில் திருமயம் என அழைக்கப்பெறுகிறது. இங்கு இரு குடைவரைக் கோயில்கள் உள்ளன. ஒன்று சத்தியமூர்த்தியாம் திருமாலுக்கு உரியது; மற்றொன்று சத்தியகிரீசுரராம் சிவனுக்கு ஏற்பட்டது. இவ்விரு குடைவரைகளையும் ஒட்டிக் கற்றளிகள் கட்டப்பட்டுள்ளன.

திருமாலுக்கு உரிய குடைவரை ஏனைய குடைவரைகளைப் போன்று தூண்கள் மற்றும் அரைத் தூண்கள் கொண்ட முகப்பினை உடையதாக இல்லை. பாறையிலேயே பறவையேறு பரமபுருடன் தனக்கே உரிய "அரவைந்தலை நாகனைப் பள்ளியானாகை" உருவாக்கப்பட்டுள்ளான். மேலும் இவன் அலைமாது பூமாது இருவருடன் செதுக்கப்பட்டுள்ளதால், போகமூர்த்தி எனப்படுகிறான். இரு கைகளுடன் காணப்படும் இவன் ஒரு கையால் திருமகளை அணைத்து மற்றொரு கையைத் தலைக்குக் கீழே தொங்கிய நிலையில் வைத்துள்ளான். ஆதிசேடனாகிய பாம்பு நஞ்சு கக்கும் தீ போன்ற நாக்குடன் காட்டப்பட்டுள்ளது. தலைக்கு அருகில் சித்ரபுத்ரன், காலன், கருடன் இருக்க, காலடியில் பூமகளும், மதுகைடபர்களும் உள்ளனர். நாபிக்கமலத்தில் பிரமன் காணப்படுகிறான். பின்சுவரில் தேவர்கள், முனிபுங்கவர் ஆகியோர் உருவாக்கப்பட்டுள்ளனர். இஃது இக் குடைவரையின் தனிப்பெருஞ் சிறப்பாகும். சுற்றுப்புறத் தேவதைகள் அதிக அளவில் உள்ளமையால், இவன் உத்தம வகுப்பைச் சேர்ந்தவன்.

> "மையார் கடலும் மணிவரையும் மாமுகிலும்
> கொய்யார் குவளையும் காயாவும் போன்றிருண்ட
> மெய்யானை மெய்யமலையானைச் சங்கேந்தும்
> கையானைக் கைதொழாக் கையல்ல கண்டமே"

என மங்கை மன்னன் "திருமெய்யத்து இன்னமுத வெள்ளத்தின்" திருவுருவ அழகிலே மெய்ம்மறந்து மங்களாசாசனம் செய்துள்

ளார். மேலும் மெய்யத்துள்ளான் அவரது ''உடலேயுள் புகுந்து உள்ளமுருகிய'' தாகவும் நெக்குருகிப் பாடிப் பரவுகிருர். அத்தகைய இவனது திருவுரு கண்கொள்ளாக் காட்சியாக உள்ளது.

இதனே அடுத்து உள்ளது சிவனின் குடைவரைக்கோயில். இது தெற்கு நோக்கி உள்ளது. இதன் முகப்பில் உள்ள இரு தூண்களும் இரு அரைத் தூண்களும், மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப்பட்டை கொண்டனவாகவும் உள்ளன. போதிகைகள் தரங்க அமைப்பினேயும், நடுவில் பட்டையையும் கொண்டுள்ளன. தூண்களில் தாமரை இதழ்கள் செதுக்கப்பட்டுள்ளன. சதுரம் மற்றும் எட்டுப் பட்டையாகப் பகுக்கப்பட்டுத் தாமரை இதழ்களுடன் கூடிய 4 அரைத் தூண்கள் இரண்டாவது வரிசையாக உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு இடைப்பட்ட மண்டபத்தின் விதானத்தில் ஓவியம் சிதைவுண்டு காணப்படுகின்றது.

கருவறை கிழக்கு நோக்கி உள்ளது. இலிங்கத் திருவுரு பாறையின் ஒரு பகுதியாக உள்ளது. கருவறைக்கு முன் உருவாக்கப்பெற்ற நந்தியும் பாறையின் ஒரு பகுதியே. இதன் இருபுறமும் வாயிற்காப்போர் செதுக்கப்பட்டுள்ளனர். வலப்புறம் உள்ளவர் இரு கைகளுடன் திரிபங்க நிலேயில் தலேயில் கொம்பு மற்றும் கரந்த மகுடத்துடன் காணப்படுகிருர். கடகம், கேயூரம் ஆகிய அணிகலன்களும் மார்பில் முப்புரிநூலும் அணிந்துள்ளார். இடக் கை கதையின்மீது இருக்க, வலக்கை இடக்கையின்மீது தண்ட முத்திரையில் உருவாக்கப்பட்டுள்ளது. இவர் மாமல்லன் பாணியில் நேராகப் பார்க்கிருர். இடப் புறம் உள்ள வாயிற்காப்போர் சமபங்க நிலேயில் காணப்படுகிருர். இடக் கை இடுப்பில் ஊன்றி இருக்க, வலக் கையைத் துதிப்பதைக் காட்ட மேலே தூக்கிய நிலேயில் வைத்துள்ளார். தலேயில் தலேப்பாகையும், மார்பில் முப்புரி நூலும் காணப்படுகின்றன. மேலும் கடகம், கேயூரம், வயிற்றுக்கட்டு ஆகியவற்றையும் அணிந்துள்ளார். ஆடை முழங்கால்வரை நன்ருகத் தெரிகிறது.

மண்டபத்தில் கருவறைக்கு எதிரே மேற்கு நோக்கி இலிங்கோற்பவர் காணப்படுகிருர். பொதுவாக இலிங்கோற்பவர் என்பது இலிங்கத்திருவுருவின் சிவ பாகத்தில் சிவன் அமைந்திருப்பது. குன்றக்குடி, பிள்ளேயார்பட்டி ஆகிய இடங்களில் உள்ள குடைவரைக் கோயில்களேப் போன்று இங்கும் சிவன் இடுப்பு வரை உருவாக்கப்பட்டு, அதற்குக் கீழே தூண் செதுக்கப்பட்டுள்ளது. தலேயில் சடைமுடியும் காணப்பட, வலக் கை 'வரத முத்திரை'யிலும், இடக் கை இடுப்பில் ஊன்றியும் (கத்ய வலம்பித முத்திரை) உள்ளன. வயிற்றில் வயிற்றுக்கட்டும்

அணிந்துள்ளான். பிரமா மற்றும் திருமால் காணப்படவில்லை. "விண் நிறைந்ததோர் வெவ்வழலினின்னுரு" என்ற அப்பர் திருவாக்கிற்கேற்பத் தூணின் இருபுறமும் தீயின் நாக்குகள் காணப்படுகின்றன. இங்குள்ளதைப் போன்று இலிங்கோற்பவரைப் பெரிய வடிவில் வேறு எங்கும் காண்பதரிது. சிவனே முழுமுதற் பொருள் என்பதை வலியுறுத்தும் இலிங்கோற்பவ வடிவம் இப் பகுதியில் உள்ள குடைவரைகளில் காணப்படுவது அக்காலத்தில் சைவ சமயம் எய்தியிருந்த உயர் நிலையை எடுத்துக் காட்டுகின்றது.

இங்குள்ள இரு குடைவரைகளிலும் முதல் இராசராசன், முதல் இராசேந்திரன், இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், சடாவர்மன் வீரபாண்டியத்தேவன், விசயநகர மன்னன் கிருஷ்ணதேவராயன் ஆகியோரின் கல்வெட்டுக்கள் காணக்கிடைக்கின்றன. இவற்றில் ஒன்று விடேல்விடுகு விழுப் பேராதி அரையன் ஆகிய சாத்தன் மாறனின் தாய் பெரும்பிடுகு பெருந்தேவி திருமால் கோயிலைச் செப்பனிட்டதாகக் கூறுகிறது. சாத்தன் மாறன் இரண்டாம் நந்திவர்மன் காலத்தவன் எனத் தெரிகிறது. இங்குள்ள கல்வெட்டுகளில் மிகச் சிறப்பாகக் கருதப்படுவது இசையைப்பற்றியதாகும். காந்தாரம், பஞ்சமம் போன்ற சில வார்த்தைகளைத்தவிர ஏனையவை அழிந்து விட்டன. இது பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மன் காலத்தியது என கல்வெட்டறிஞர்கள் கருதுகின்றனர்.

இங்குள்ள குடைவரைக் கோயில்கள் மகேந்திரவர்மன் பாணியில் உருவாக்கப்பட்ட போதிலும், இராசசிம்மன் பாணியில் புதைசிற்பங்களுக்கு அளிக்கப்பட்ட முதன்மை இங்கும் அளிக்கப் பட்டுள்ளது. மேலும் ஏனைய முத்தரையர்களின் குடைவரைக் கோயில்களைப் போன்று இங்கும் இலிங்கத் திருவுரு பாறையின் ஒரு பகுதியே. எனவே இதன் காலத்தை 8ஆம் நூற்றாண்டாகக் கொள்ளலாம்.

———

## அச்சமும் அவாவும்

"மேம்மக்கள் ஒழுங்காக வாழவேண்டுமானால் பெரும்பாலும் அச்சத்தால்தான் அது முடியும் என்றும், சிறுபான்மை ஆசையினாலும் முடியும் என்றும் திருவள்ளுவர் கூறுகின்றார். ஊழல் மலிந்த சமுதாயம் திருந்துவதற்கும் அந்த இரண்டுமே உதவும் என்று கூறலாம்."

—டாக்டர் மு. வரதராசனார்

(மண்ணின் மதிப்பு, பக் 99)

# சங்க நூல்களில் மூதாய்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

சங்க நூல்களில் 'மூதாய்' என்றவொரு பூச்சி கூறப்பட்டுள்ளது.

''தண்பெயல் பொழிந்த பைதுறு காலைக்
குருதி யுருவின் ஒண்செம் மூதாய்
பெருவழி மருங்கில் சிறுபல வரிப்பப்
பைங்கொடி முல்லை மென்பதப் புதுவீ
வெண்களர் அரிமணல் நன்பல தாஅய்'' —அகம். 74

''அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணிமிடைந் தன்ன குன்றங் கவைஇய
அங்காட் டாரிடை மடப்பிணை தழீஇத்
திரிமருப் பிரலை புல்லருந் துகள
முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்'' —அகம். 14

''தண்ணறும் படுநீர் மாந்திப் பதவருந்து
வெண்புறக் குடைய திரிமருப்பு இரலை
வார்மணல் ஒருசிறைப் பிடவவிழ் கொழுநிழற்
காமர் துணையொடு ஏமுற வதிய
அரக்குநிற உருவின் ஈயல் மூதாய்
பரப்பி யவைபோல் பாஅய்ப் பலவுடன்
நீர்வார் மருங்கின் ஈரணி திகழ'' —அகம். 139

''மணிமிடை பவளம் போல அணிமிகக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்பப்
புலனணி கொண்ட காரெதிர் காலை'' —அகம். 304

''இன்குரல் அழிதுளி தலைஇ நன்பல
பெயல்பெய்து கழிந்த பூநாறு வைகறைச்
செறிமணல் நிவந்த களர்தோன்று இயவில்
குறுமோட்டு மூதாய் குறுகுறு ஓடி
மணிமண்டு பவழம் போலக் காயா
அணிமிகு செம்மல் ஒளிப்பன மறையக்
கார்கவின் கொண்ட காமர் காலை'' —அகம். 374

"தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி
அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டும்
நீவிளை ஆடுக சிறிதே யானே" —நற்றிணை. 362

"ஈயலின் மூதாய் பரப்ப வினமரீஇக்
கோவல ரூதுங் குழலிரங்க—
கோவர் தவழக்கால் செய்தன்று"
—நாற்கவிராசநம்பி. சூ. 170. மேற்கோள்

"செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவுங்
கொல்லை நெடுவழிக் கோப மூரவு
முல்லை சான்ற முல்லையம் புறவின்"
——சிறுபாணாற்றுப்படை. 167-169

மேற்காட்டிய பாட்டுக்களில் மூதாய் என்ற பூச்சியைப்பற்றிக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். இயற்கையை இருந்தவாறே கூறும் வல்லுநர்களான சங்கப்புலவர்கள் இயற்கையிலேயே மிக மிக அழகானதொரு பூச்சியைப்பற்றிக் கூறியிருப்பது மிகவும் போற்றத்தக்கதாகும். நான் சிறுவனாக இருந்த காலத்தில் இந்தப் பூச்சிகளைப் பிடித்து விளையாடிப் பொழுதுபோக்கி யுள்ளேன். தமிழ்நாட்டுப் பூச்சிகளில் மிக அழகானவை இரண்டே. ஒன்று பறக்கும் பட்டாம்பூச்சி, மற்றொன்று மூதாய். இந்த மூதாயைப் பட்டுப்பூச்சி என்று பேச்சு வழக்கில் கூறுவர். இந்தப் பூச்சி மாரிக்காலத்தில் முதல்மழை பெய்தால் தோன்று கின்றது. இவ்வாறு திடீரென்று தோன்றித் திடீரென்று மறைந்து விடும் இந்த அரிய பூச்சியையும் சங்கப் புலவர்கள் தெரிந்து கூறியுள்ளார்கள். இந்தப் பூச்சி கடுஞ்சிவப்பான அழகிய நிறமுடையதாகும். அதனால்தான் 'கடுஞ்செம் மூதாய்' என்று நற்றிணை கூறுகின்றது. ஆங்கிலத்தில் Crimson நிறம் என்று கூறுவர். 'கடு' என்ற சொல்வழக்கைக் கூர்மையாகக் கவனிக்க வேண்டும். பசு கன்றை ஈன்றவுடன் அதன் பால் கெட்டி யாகவும், கொழுப்பு மிக்கதாகவும் இருக்கும். அதனால் 'கடும்பால்' என்று வழங்குகின்றனர். அதனால் எதுவும் மிக்கு இருப்பின் 'கடும்' என்ற சொல்லைப் பயன்படுத்துவது கண்டதே. ஆதலின் 'கடுஞ்செம் மூதாய்' என்று நற்றிணை கூறியுள்ளது. இந்தப் பூச்சியைத் தொட்டால் 'வெல்வெட்' என்ற ஆடையைப் போல் மிகமிக மெதுவாக இருக்கும்.

"தண்பெயல் பொழிந்த பைதுறு காலை"யிலும்
இன்குரல் அழிதுளி தலைஇ நன்பல
பெயல்பெய்து கழிந்த பூநாறு வைகறை"யிலும்

மூதாயைக் கண்டதைச் சங்கநூற் புலவர்கள் கூறியுள்ள செய்தி சிறப்பான இயற்கைச் செய்தியாகும். நான் சிறுவனுக இருந்த போது இந்தப் பூச்சியை மழைக்காலம் தொடங்கியவுடன் காலை யிலே பெரும்பாலும் கண்டிருக்கின்றேன். வெயில் வந்தவுடன் இந்தப் பூச்சிகள் இருந்தவிடமே தெரியாது. ஆனல் மாலைக் காலத்திலும் இந்தப் பூச்சிகள் ஊர்வதைக் காணலாம்.

"தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி
அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டும் கொண்டும்
நீவிளை ஆடுக சிறிதே யானே"
—நற்றிணை. 362

மேலே காட்டப்பட்டுள்ள நற்றிணைப் பாட்டில் உடன் போக்கில் வந்த தலைவியைத் தலைவன் "நான் ஆறலைக் கள்வரைப் போர் செய்ய வரின் அஞ்சாது அவர் ஓடும்படி வேங்கை மரத்தில் மறைந்து செய்வேன். உன் சுற்றத்தார் தேடிவரின் வேங்கை மரத்தில் மறைந்துகொள்வேன். நீ முதற்பெயலைப் பெய்யத் தொடங்கிய குளிர்ச்சியான காட்டில் ஈயலின் மூதாயை நோக்கியும் அவற்றைப் பிடித்துச் சிறிது பொழுது விளையாடுவாயாக" என்று தலைவன் சொன்னதாகக் கூறப்பட்டுள்ளது. நான் இந்தப் பாடலைக் கல்லூரியில் படிக்கும்போது எனது இளமைக்கால விளையாட்டை நினைவு கூர்ந்து இப் பூச்சியைப்பற்றி அப்போதே குறிப்பெடுத்துச் சங்கநூற் செய்திகளோடு ஒப்பிட்டுப் பார்த்த குறிப்புக்களை இப்பொழுது படித்தேன். இந்தப் பூச்சியைத் திண்டிவனத்தில் **Hope Villa** என்ற வளாகத்தில் இருந்த கால் பந்துத் திடலில் 'கண்டும் கொண்டும்' விளையாடியிருக்கின்றேன். பள்ளி மாணவனுக இருந்தபோது பட்டாம்பூச்சியைப் பிடிப்பதிலும் தும்பிகளைப் பிடிப்பதிலும், வெட்டுக்கிளிகளைப் பிடிப்பதிலும் மூதாய் என்ற பட்டுப்பூச்சியைப் பிடித்து வளர்ப்பதிலும் ஆர்வ முடையவனுக இருந்தேன். மூதாய் என்ற பட்டுப்பூச்சிகளைப் பிடித்துக் கூட்டில் அடைத்து அதனுடைய உணவு என்று நான் கருதிய புல்லைப் போட்டு வளர்த்துப் பார்த்தேன். ஆனல் இந்தப் பூச்சியின் இயற்கை உணவு புல் அன்று. ஆனல் அக்காலத்தி லேயே இயற்கையில் மிகமிக அழகான பஞ்சவர்ண வெட்டுக் கிளியைப் **(Poceilocerus Pictus Flo)** பிடித்து அதற்கு அது வாழ்ந்த சுக்கான்கீரைத் தழையைப்போட்டுக் கூட்டில் வளர்த் தேன். அதுபோலப் பொன்வண்டைப் பிடித்து அதற்குக் கொடுக்காப்புளி இலையைக் கொடுத்து வளர்த்திருக்கின்றேன். ஆனல் மூதாயின் உணவு அப்போது தெரியவில்லை. அதனல் அவை இறந்தன. நான் சில ஆண்டுகளுக்குமுன் இந்த

விந்தைமிகு பூச்சியைப்பற்றி அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் விலங்கியல் துறையில் இருந்த அறிஞர்களிடையே இந்தப் பூச்சியின் பழக்க வழக்கங்கள் என்னவென்று கேட்டேன். இந்தப் பூச்சியைப்பற்றி அறிவியலார்கூட இதுவரை ஆராயவே இல்லை. பூச்சி நூல் அறிஞர்கள் நன்மை தரும் பூச்சிகளையும், தின்மை தரும் பூச்சிகளையும் மட்டும் ஆராய்கிருர்கள். நன்மையும், தின்மையும் தராத இந்தப் பூச்சியை ஆராய்ந்தாரில்லை. இயற்கையில் உள்ள இந்த மிக அழகிய பூச்சியை அறிவியல் அறிஞர்கள் ஆராயாதது பெரிய குறையே. இந்தப் பூச்சி மேல்நாடுகளில் உள்ளது. ஆனுல் தமிழ்நாட்டில் காணப்படும் பூச்சி உருவிலும் பெரியதாக உள்ளது என்று பூச்சிகளைப்பற்றிய நூலில் படித்தேன். இந்தப் பூச்சியின் அறிவியல் பெயரைத் தெரிந்துகொள்ளப் பல ஆண்டுகளாக முயன்றேன். கடைசியில் நான்கு ஆண்டுகளுக்கு முன்புதான் அமெரிக்காவிலிருந்து வெளியிடப்பட்ட பூச்சி நூலில் **(General & Applied Entonology-N. A. Little)** கண்டு பிடித்தேன்.

சங்கப்புலவர்கள் இயற்கை அறிவொடு கூறிய ஓர் அழகிய பூச்சியை இன்றும் நம் தமிழர்கள் நன்கு தெரியாதிருக்கிருர்கள். இந்தப் பூச்சியைப்பற்றிச் சங்க நூல்கள் கூறும் செய்திகள் அரிய அறிவியற் செய்திகளாகவும், இயற்கைச் செய்திகளாகவும் இருப்பதைக் காணும்போது வியப்படையாமல் இருக்க முடியாது. இப் பூச்சி கார்காலத்தில் முதல் மழையில் தோன்றுவது; புல் வெளியில் தோன்றுவது; முல்லை நிலத்தில் தோன்றுவது என்று சொல்லப்பட்டிருப்பது முற்றிலும் உண்மையாகும். அறிவியலாரும் கண்டறியாதது. நான் இந்தப் பூச்சியைப் பிடித்தும் வளர்த்தும் பார்த்த பட்டறிவின் காரணமாக உண்மையைக் கூறுகின்றேன்.

மற்றும் ஓர் இயற்கைச் செய்தியைக் குறுந்தொகை கூறுகின்றது. அரிய செய்தி; இயற்கையான செய்தி; நான் சிறுவனுயிருந்தபோது கண்ட செய்தி.

"காமம் காம மென்ப காமம்
அணங்கும் பிணியு மன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்ரு விளம்புல்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே" —குறுந்தொகை. 204

பழங் கொல்லையாகிய மேட்டுநிலத்தில் தழைத்த முதிராத இளைய புல்லை முதிய பசு நாவால் தடவி இன்புற்ருற்போல நினைக்குங் காலத்தில் அக் காமம் புதிய இன்பத்தை உடையதாகும் என்று உரை கூறப்பட்டுள்ளது. இந்த உரை தவறு

என்பதை ''மூதாவா, மூதாயா'' என்ற தலைப்பில் செல்வியில் நான் எழுதிய கட்டுரையில் விளக்கியுள்ளேன். 'விருந்தே காமம்' என்ற வரியில் வரும் 'விருந்து' என்பதற்குத் தொல்காப்பியர் கூறிய விளக்கத்தின்படி புதியது என்பதே பொருளாகும். குறுந் தொகை உரையிலும் விருந்தென்பது புதிதாகத் தோன்றிச் சிறிது பொழுதில் அழிவதென்றும், என்றும் நிலை நிற்கும் நற்குணமன்றென்றும் உணர்த்தியபடி என்று உ. வே. சாமி நாதய்யர் உரையில் கூறப்பட்டுள்ளது. இந்த உரையை முக்கியமாகக் கருத வேண்டும். மூதாய் என்ற பூச்சியும் புதிதாகத் தோன்றிச் சிறு பொழுதில் மறைந்ததை நான் பட்டறிவு வாயிலாக இளமைக் காலத்தில் கண்டறிந்தேன். இந்தப் பூச்சி நிலையாக நிற்கும் தன்மை இல்லாததையும் அறிந்தேன். மற்றும் முக்கியமாக இந்த மூதாய் என்ற பூச்சி புல்லுடைய மேட்டுப்பாங்கான நிலத்தில் காணப்பட்டதையும் கண்டுபிடித்துள் ளேன். ஆதலின் குறுந்தொகையில் கூறிய 'முதைச்சுவற் கலித்த முற்று இளம் புல் மூதா தைவந் தாங்கு' என்று கூறிய வரியில் அரிய பெரிய இயற்கைச் செய்தி கூறப்பட்டிருப்பதை நினைந்து நினைந்து இன்புற்றேன்.

வெளிநாட்டு அறிவியல் ஆராய்ச்சியாளர் நூலில் தெரிந்த படி இந்தப் பூச்சி நிலத்தில் கூடு கட்டி வாழும் சிறிய குளவி முதலிய பூச்சிகளை வேட்டையாடி வாழ்வதாகத் தெரிகின்றது. இந்தப் பூச்சி அரை அங்குலம் நீளம் உடையது என்று இந்தியப் பூச்சியாராய்ச்சியாளர் கூறுவர். 'அக்காரினு' என்ற குடும்பத்தைச் சேர்ந்தது என்று இதைப்பற்றி ஒரு வெளிநாட்டு நூல் கூறும் செய்தி கூர்ந்து கவனிக்கத்தக்கது.

இந்தியாவில் வாழும் மூதாய் பூச்சிகள் மூன்று மில்லி மீட்டர் நீளமுடையது.

மூதாயைப் பட்டுப் பூச்சு என்று நாலாயிர திவ்வியப்பிரபந்த ஈட்டில் அழைக்கப்படுகின்றது. இந்தப் பெயர் பேச்சு வழக்கா கும். இந்தப் பேச்சு வழக்கையே நான் பொதுவாகக் கேட்டிருக் கின்றேன். அறிவியல் நூலில் 'வெல்வெட்' போன்ற உட லுடையது என்று குறிப்பிட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். உலகில் காணப்படும் இந்தப் பூச்சி மஞ்சள் நிறம், பொன் நிறம், சிவப்பு நிறமுடையது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல் தமிழ்நாட்டில் காணப்படும் இந்தப் பூச்சி கருஞ்சிவப்பு நிறம் உடையதாகும். சில இடங்களில் தற்காலத்தில் வெல்வெட் பூச்சி என்றும் அழைக்கின்றனர்.

''மணிமிடை பவளம் போல் அணிமிகக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்

ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்பப்
புலனணி கொண்ட காரெதிர் காலை''

என்று அகநானூற்றுப் பாடல் 304 கூறுகின்றது. நான் மழைக் காலத் துவக்கத்தில் ஒரு நாள் விடியற்காலையில் சென்னைக்குச் சென்ற போது இப்பொழுது மறைமலை அடிகள் நகர் நிறுவப் படும் புறநகர் முன்னர்க் குறுங்காடாக இருந்த இடத்தில் அக நானூற்றில் கூறப்பட்ட காட்சியைக் கண்டேன். முல்லை நிலத்துக் குறுங்காட்டில் வாழும் ஒரு குறுமரம் காசா என்ப தாகும். இந்தக் குறு மரத்தின் பூ நீலநிறமுடையதாகும்; அழகி யதுமாகும். அதனால் கிராமத்துப் பெண்களின் பெயர்கள்கூடக் 'காசாம்பூ' என்று வழங்குவதைக் காணலாம். இந்த நீலக் காசாம்பூ இதழ்கள் விழுந்த தரையில் 'காரெதிர் காலை' ஈயல் மூதாய் ஈரமணற் புறத்தை வரிப்ப மணிமிடை பவளம் போல அணிமிகுந்து புலன் அணி கொண்டதைக் கண்கூடாகக் கண் டேன். இந்தக் காட்சியை அகநானூறு (304) பாடலில் பாடிய இடைக்காடனூர் மாபெரும் புலவர் என்பதில் ஐயமில்லை. இடைக் காடனூர் இரண்டு பாடல்களில் அகநானூற்றில் இந்தப் பூச்சியைப் பாடியுள்ளார். இந்தப் பூச்சியும் முல்லை நிலப் பூச்சியாகும். முல்லை நிலத்திணைக்குரியவர் இடையவராவர். அந்த நிலத்திணைக் குரிய பெரும் புலவர் ஒருவர் இந்த அரிய அழகிய பூச்சியை இரண்டு பாட்டுக்களில் பாடினது சிறப்பானதாகும்.

''மணிமிடை பவளம் போல அணிமிகக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்ப''

என்ற அகநானூற்று 304ஆம் பாடல் நித்திலக் கோவைத் தொகுதியில் வருகின்றது. அதுபோலவே

''மணிமண்டு பவழம் போலக் காயா
அணிமிகு செம்மல் ஒளிப்பன மறைய''

என்ற அகநானூற்று 374ஆம் பாடலும் நித்திலக் கோவையில் தான் காணப்படுகின்றது.

காயா போன்ற மணியையும் பவழத்தையும் இணைத்து அணி கலமாகக் கூறிய உவமை அகநானூற்றில் இரண்டாம் தொகுதி யான 'மணிமிடை பவளம்' என்ற தொகுதியில் இல்லையென் பதைக் காணும்போது அகநானூறு தொகுக்கப்பட்டதில் பாடல்கள் மாறினவா என்ற ஐயம் ஏற்படுகின்றது. மணிமிடை பவளம் என்ற தொகுதியில் அதன் தொடர்பான பாடல்கள்தாம் இருந்திருக்க வேண்டும். அவை இல்லையே. மணிமிடை பவளத்தைப்பற்றிக் குறிப்பிடும் பாக்களில் ஒன்று களிற்றியானை நிரையிலும் மற்ற இரண்டு பாடல்கள் நித்திலக் கோவையிலும்

காணப்படுவதைக் காணும்போது அகநானூற்றுப் பாடல்களை முதலில் தொகுத்தபோது மணிமிடைபவளம் என்ற தொகுதியில் இப் பாட்டுக்கள் இருந்திருக்க வேண்டும் என்று கருதுகின்றேன். பின்னுல் மாற்றப்பட்டிருக்கலாம். தொகுத்தபோது சூட்டிய பெயர்கள் மிக அருமையானவை. களிற்றியானை நிரை, மணி மிடைபவளம், நித்திலக்கோவை என்ற பெயர்கள் பொருத்தமான பெயர்களாகும். களிற்றியானை நிரை என்ற பெயரை விலங்கியல் அறிவோடு ஆராய்ந்தால் ஓர் அறிவியல் உண்மை புலப்படுகின்றது. ஆண்யானைகள் பெண்யானைகளைக் கூடும் காலத்தில்தான் பெண்யானைகளுடன் நெருங்கிப் பழகும். ஆனுல், குட்டிகள் பிறந்தபிறகு சிறிதுகாலம் கழித்து ஆண்யானைகள் தங்கள் துணைவிகளைத் துறந்துவிட்டு ஆண்யானைகள் பலவும் ஒன்று சேர்ந்து தனிக்கூட்டமாகக் காட்டில் வாழும். இதை நான் எழுதிய நூலான விலங்கின விளக்கத்தில் குறிப்பிட்டுள்ளேன். இந்தப் பெருமித நடைமிக்க களிற்றியானைகள் வரிசையாகப் போவதைப் பார்த்துப் பிற்காலப் புலவன் ஒருவன் நுண்ணுணர்ச்சியால் பட்டறிவோடு 'களிற்றியானை நிரை' என்ற பெயரைச் சூட்டினுன். இத் தலைப்பில் சில பாடல்களைத் தொகுத்தான். அதேபோல 'மணிமிடைபவளம்' என்ற அழகிய பாட்டு வரியைப் படித்த அதே பிற்காலப் புலவன் அந்த வழக்கையே இரண்டாம் தொகுதிக்குப் பெயரிட்டான். தமிழ்நாட்டின் தலைசிறந்த மணி முத்தாகும். ஆதலால் மூன்ருந் தொகுதிக்கு நித்திலக்கோவை என்று பெயரிட்டான். இந்த முத்து என்ற சொல்லின் மிகப் பழைய உருவம் 'முத்தில்' என்று இருக்க வேண்டும் என்று செல்வியில் ஏற்கெனவே எழுதியுள்ளேன். மலையாளத்தில் இத்தில், முற்றில் என்ற பெயர்கள் கிளிஞ்சில்களுக்கு வழங்கினதைக்கண்டு கேட்டறிந்துள்ளேன். கிளிஞ்சிலைப் போலச் செதில்களை உடைய எறும்புத் திண்ணி என்ற விலங்கை மலையாளத்தில் 'இத்தில் முள்ளன்' என்று நாட்டுப்புற மக்கள் அழைப்பதைக் கேட்டிருக்கின்ரேன். இந்தக் கிளிஞ்சலைப்போல உடலில் முள்ளையுடைய விலங்கு என்ற பொருளில்தான் மலையாளத்தில் இந்தப் பெயர் வழங்கப்படுகின்றது. இந்த எறும்புத் திண்ணி என்ற பெயர் ஆங்கிலமொழியில் இருந்து மொழி பெயர்த்து வழங்கினதாகும்.

பழைய தமிழ்வழக்குப் பெயர்களை மறந்து, திராவிடமொழிப் பெயர்களை மறந்து, அடிமைத்தனமாக நமது நாட்டு உயிரிகளுக்கு வழங்கும் நாட்டுப்புறப் பெயர்களை மறந்து ஆங்கிலப் பெயர்களை அப்படியே மொழிபெயர்த்துப் பெயர் ஆக்கம் செய்து தற்காலத் தமிழ் அகராதிகளும் கலைக்களஞ்சியமும் செய்யும் பணி முறையானதன்று. எறும்புத்திண்ணியை நான் செஞ்சிமலையில் கண்

டிருக்கின்றேன். அதை ‘அலங்கு’ என்றும் ‘நலுங்கு’ என்றும் கூறுவார்கள். அலவாங்கு என்ற பெயர் தோண்டும் கடப்பாரையைக் குறிக்கும். எறும்புத்திண்ணியும் நிலத்தைத் தோண்டும் விலங்கு ஆதலால் நாட்டுப்புறத்தில் அலங்கு என்றும் நலுங்கு என்றும் அழைத்தனர். ஆனால் இந்தப் பெயர்கள் இந்த விலங்குக்கு உரிய பெயராக அகராதிகளில் காட்டப்படவில்லை. ‘எறும்புண்ணி’ என்ற பெயர்தான் அகராதிகளிலும் கலைக்களஞ்சியத்திலும் காணப்படுகின்றது. இதன் செதில் ஓடுகள் இன்றும் என்னிடம் உள்ளன.

வைணவ ஈடுகளில் தமிழே மணியாகவும், வடமொழி பவளமாகவும் கருதப்பட்டிருப்பதைக் கவனிக்கவேண்டும். அது போன்றே ‘மணிப்பிரவாளம்’ என்ற மலையாளப்பாட்டு இலக்கியத்தில் மணி தமிழாகவே இருந்துள்ளது. பவளம் வடமொழியாக இருந்துள்ளது. பிற்காலத்தில் சோழப்பெருமன்னர்கள் (**Imperial cholas**) காலத்தில் ஈழநாடு சோழர்களின் ஆட்சியில் இருந்தது. அதனால் நீல நிறமணிகள் (**Sapphires**) நிறையக் கிடைத்த ஈழநாட்டில் இருந்து ஏராளமான மணிகள் தமிழ் நாட்டிற்கு வந்து மேலைநாட்டுக்குச் சங்ககாலத்திலும் பிற்காலச் சோழர் காலத்திலும் ஏற்றுமதியாக்கப்பட்டன. அகநானூறு தொகுக்கப்பட்டது பிற்காலச்சோழப் பேரரசுக்காலமாகலாம். பிரவாளம் எனப்படும் பவளம் மேல்நாட்டிலிருந்து தமிழ்நாட்டிற்கு இறக்குமதியானது. பவளம் வடசொல்லாகும். தமிழ்ச் சொல்லையும், வடமொழிச்சொல்லையும் சேர்த்து ‘மணிமிடை பவளம்’ என்று அகநானூற்றின் இரண்டாவது தொகுதிக்குக் கூறியது மிக அரிய நுண்ணிய அழகிய வழக்காகும்.

‘குணகடல் துகிர்’ என்று பட்டினப்பாலையில் கூறியிருப்பினும் அந்தத் துகிர் என்ற பவளம் குணகடலில் விளைந்ததில்லை. கி. பி. முதல், இரண்டாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டுடன் கொண்ட வணிக வரலாற்றை எழுதிய கிரேக்க, உரோம வரலாற்று நூலாசிரியர்கள் தமிழ்நாட்டில் இருந்து ஏற்றுமதிசெய்த உயர்ந்த முத்தையும் மேல்நாட்டிலிருந்து தமிழ்நாட்டுக்கு இறக்குமதியான பவளத்தையும்தான் கூறியுள்ளனர். இந்தப் பவளம் உயர்ந்த வகையான பவளமாகும். அதை அக்காலத்திலேயே (**Alexandrian pearl**) என்றழைத்ததைக் காணலாம். ஆதலின் ‘குணகடல் துகிர்’ என்பதற்குத் தமிழ்நாட்டில் கிழக்குக் கடலில் பவளம் விளைந்ததாகக் கருதினது தவறாகும். சிறந்த பவளம் அக்காலத்தில் இத்தாலியக் கடலில்தான் விளைந்தது. உரோமை நாட்டுடன் கி. மு. சில நூற்றாண்டுகளுக்கு முன் வணிகத் தொடர்புகொண்ட பண்டைத் தமிழன் பவளத்தை நன்கு தெரிந்

திருந்தான். ஆதலின் அந்தப் பவளம் தமிழ்நாட்டில் நிறைய இறக்குமதி செய்யப்பட்டு வழங்கியதால் சங்க காலத்தில் 'மணி மிடைபவளம்', 'மணிமிடை பவழம்', 'பவளமொடு மணிமிடைந் தன்ன' என்ற அரிய பெயர் வழக்கு உவமைகளைச் சங்கப் புலவர்கள் பாடியிருக்கிறார்கள். அந்த அரிய வழக்கைப் பின் பற்றியே மிகமிகப் பிற்காலத்தில் வைணவர்களின் ஈடுகளிலும் உரைநடைப் பெயருக்கு 'மணிப்பிரவாளநடை' என்ற வழக்கு தோன்றிற்று. மலையாளத்திலும் தமிழ்மரபை ஒட்டி மணிப்பிர வாளம் என்ற வழக்கு வந்தது. ஆதலின் மணிப்பிரவாளம் என்ற வைணவ வழக்கும், உரைநடைபற்றிய மலையாள வழக்கும் இரண்டாயிரம் ஆண்டுக்கு முன் தோன்றிய சங்க நூலான அக நானூற்றுப் பாடல் வழக்கை ஒட்டியதாகும் என்பதை உணர வேண்டும்.

மணிமிடைபவளம் என்ற சொற்றொடரில் மணி தமிழ் ஆகும். அது நீலமணியாகும். காயாம்பூ நிறம் நீலமாகும். நீலமும் (**Sapphires**) பவளமும் (**Coral**) சேர்ந்த கோவையையே சங்ககாலத் தமிழன் சிறந்த அணிகலமாக விரும்பினான். அதனால்தான் அக நானூற்றில் ஒரு தொகுதிக்கு 'மணிமிடை பவளம்' என்று தொகுத்த புலவர் பெயரிட்டார். இந்த மூதாய் என்ற அழகிய பூச்சியைச் சங்க நூல்கள் உவமித்த அழகிய வழக்கை ஒட்டி அக நானூற்றைப் பிற்காலத்தில் தொகுத்த புலவனும் மற்றும் வைணவ உரை நூலான ஈடும் பயன்படுத்தியது குறிப்பிடத்தக்க தாகும். சங்ககால மரபை இரண்டாயிரம் ஆண்டுவரை இலக் கியத்தில் பின்பற்றியது அரிய செய்தியாகும். மூதாயை அறி வியலில் **Mutillus Muttillus** என்று அழைப்பர். **Muttilidal** என்ற குடும்பத்தைச் சார்ந்ததாகும்.

**கருவி நூல்கள் :**

தமிழ் :

(1) அகநானூறு இரண்டு பதிப்புகள்—பழையபதிப்பு, கழகப் பதிப்பு.
(2) குறுந்தொகை— உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு.
(3) நற்றிணை —பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் பதிப்பு; மற்றும் ஔவை துரைசாமி பிள்ளையவர்கள் பதிப்பு.
(4) ஈட்டின் தமிழாக்கம்—புருடோத்தம நாயுடு—சென்னைப் பல்கலைகழக வெளியீடு.

ஆங்கிலம் :

(1) General and Applied Entomology—N. A. Little.
(2) Insects—M. S. Mani—National Book Trust.
(3) Common Insects of India—N. P. Kalyanam—Asia Publishing House.

———

# அதியமான் சத்திய புத்திரனு?

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

அசோகன் கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்ட சத்தியபுத்திரன் என்னுஞ் சொல்லாட்சியைத் தாங்கிய அதியமானின் கல்வெட்டு, அண்மையில், திருவண்ணுமலைக்கருகில் சம்பை என்னுமிடத்தில் கிடைத்திருப்பதாகத் தமிழகத் தொல்பொருளாய்வுத் துறை இயக்குநர் அறிவித்திருக்கிருர். அந்தக் கண்டுபிடிப்பின் அருமையை வியந்து தினமணி நாளிதழிலும் கட்டுரை தீட்டியுள்ளார். பல புதிய கல்வெட்டுக்களைக் கண்டறிவதிலும் பூம்புகார் அடிக்கடல் அகழ்வாராய்ச்சியிலும் மீதூர்ந்த அவருடைய ஆர்வம் தமிழக வரலாற்றை மீட்டமைக்க உதவும். அத்தகு வரலாற்றுச் சான்றுகளில் உண்மை போலத் தோற்றமளிப்பவற்றைச் சல்லித் தெடுத்து நீக்க வேண்டும். அவர் இந் நோக்கில் முனைப்பு கொளின் தெள்ளிய உண்மைகள் புலனுகும்.

''சத்ய புதோ அதியமான் நெடுமான் அஞ்சி ஈத்த பாழி' என்றும், ''சத்ய புடோ அதியமான் நெடுமான் அஞ்சி ஈத்த பாலி'' என்றும், இரு பாட வேறுபாடுகளுடன், சம்பைக் கல்வெட்டு படிக்கப்பட்டுள்ளது. முன்னதே சற்றுச் பொருத்தமான பாடமாக இருக்கலாம்.

பார்ப்பனரான கபிலர்கூடச் சத்தியபுத்திரன் போன்ற சொல்லாட்சிகளைக் கடைக்கழக காலத்தில் ஆளவில்லை. புறநானூற்றில் வரும் ஔவையின் அருந்தமிழ்ப் பாடல்கள் செந்தமிழ் நடையில் சிந்தையள்ளும் தனித் தமிழ்ச் சொல்லாட்சிகளால் மிளிர்கின்றன. செவ்விய ]தமிழ்ப்புலமை ஓங்கிய கடைக்கழகக் காலத்தில் சத்ய புதோ அதியமான் என்று கல்வெட்டு பொறிக்கப்பட்டது என்பதை நம்பவே முடியாது. அக்காலத்தில் பாலி, பிராகிருத மொழிகளில் தனிப் புலமை சான்ற சமண பௌத்தத் துறவியரும் பிறசொல் விரவாச் செந்தமிழ்ப் பனுவல்களை யாத்துள்ளனர். ஐஞ்சிறுகாப்பியங்களும் நாலடியாரும் இதற்குச் சான்று. புத்திரனை புத்த, புத என்பது பாலி பிராகிருத வழக்கு.

உண்மையான தமிழ்ப்புலமை சான்ற பெருமக்களனைவரும் தொல்காப்பியர் காலந்தொட்டே,

*''வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ*
*எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே''*

என்னும் தமிழ்மரபைப் பேணி வந்துள்ளனர். தமிழ் நலம் பேணும் கருத்தின்றித் தன்னலம் பேணும் பெற்றியரே, பிற்காலத்து, வடவெழுத்தொலிப்புகளைத் தமிழ்ப்படுத்தாது அங்ஙனமே எழுதுவாராயினர். தமிழ்மரபிலக்கணம் பயிலாக் கல்விக் குறைபாடு மூவேந்தராட்சி நிலைகுலைந்த களப்பிரர் காலம் தொட்டே கால் கொண்டது. சத்ய புதோ போன்ற சொல்லாட்சிகள் களப்பிரர் காலத்திற்குப் பிற்பட்டதாக இருக்கவேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் இத்தகு சொல்லாட்சிகள் கல்வெட்டில் இடம்பெறுவதைக் காலத்தால் முற்படுத்துவது அறவே பொருந்தாது.

அசோகன் கி. மு. மூன்ரும் நூற்ருண்டினன். அவனுக்கு முன்பும் அதியமான்களின் மரபிருந்தது. அதியர், உதியர், பொறையர் என்போர் சேரக்கிளை மரபினர். அதியன் மரபினர் தமிழகத்திற்குப் புதிதாகக் கரும்பைக் கொணர்ந்தவர் என்று தவருது குறிப்பிடும் தமிழிலக்கியங்கள் அவன் மரபு வாய்மையால் புகழ்சான்றது (சத்திய புத்திரர்) என்னும் வரலாற்றுக் குறிப்பு இருந்திருந்தால் அதனைக் குறிப்பிடாதது ஏன்?

அசோகன் அதியமான் மரபை மட்டும் சத்தியபுத்திரர் என்று குறித்திருக்க முடியாது. மூவேந்தரிடம் காணப்படாத வாய்மையும் சால்பும் அதியமான்களிடம் மட்டும் காணப்படுமாறில்லை. அங்ஙனம் ஏதேனும் குடிப் பெருமை உளதாயின் அது பண்டு தொட்டே சேரர் குடிக்குளதாய சிறப்பியல்பேயன்றிக் கிளைக்குடியினராய அதியர்க்குச் சிறப்புடைமையாகாது. அதியமான்களை மட்டும் சத்தியபுத்திரர் என்பது ஏனை மூவேந்தரையும் பாரி, ஓரி, காரி போன்ற குறுநில மன்னரையும் பண்பளவில் குறைத்துக் காட்டி விடும்.

அசோகனின் கண்ணில் பாண்டியன் வெறும் பாண்டியனுகவும் சோழன் வெறும் சோழனுகவுங் காணப்படும்போது அதியன் மட்டும் எப்படிச் சத்தியபுத்திரனுகத் தோற்றம் கொண்டான் என்பதை திரு. சேச ஐயர் ஏற்கெனவே தெளிவுபடுத்தியிருக்கிருர்.

தமிழ்ச் சொற்கள் வடவர்களின் ஒலிப்பில் கொள்ளும் வேறுபாடுகள் பல. அவற்றுள் உயிர்முதற் சொற்களுக்குச் சகர ஒலிப்பு கூடுவது ஒன்று. உப்பு என்னும் தமிழ்ச்சொல் வடதிரவிட மொழிகளில் 'சுப்பு' எனப்படுகிறது. ஆயிரம் வடமொழியில் சாயிரம்—சஹஸ்ரம் என உருமாறிவிட்டது. இவ்வாறே அதியன்—சதியன் ஆயிற்று. மகன்—மான் எனத் திரியும். சேரமகன்—சேரமான். அதியர்மகன்—அதியமான். சேரமான்—

கேரளபுத்ர ஆனதைப்போல அதியமான்—சதியபுத்ர ஆயிற்று என்று திரு. சேச ஐயர் கூறுகிறார். அசோகனின் கல்வெட்டின் 'சத்ய' என்று படிக்கப்பட்ட சொல்லில் தகர மெய்யோடு இகரம் சேர்ந்துள்ளது என்றும் அதனைச் 'சதியபுத்ர' என்றுதான் படிக்க வேண்டும் என்றும் தெளிவுபடுத்துகிறார். அதியமான் என்னும் குடிப்பெயரின் முற்கூறு 'சதிய' என ஒலித்திரிபுற்றும் 'மான்' என்னும் பிற்கூறு 'புத்ர' என மொழிபெயர்ப்புற்றும் 'சதிய புத்ர' ஆகியுள்ளது என்கிறார். அதியன் 'சதிய' ஆனது உண்மை. மான் 'புத்ர' என்று திரியவில்லை.**

வடமொழியில் வணிகரை 'வணிகபுத்ர' என்றும், கயாவிலுள்ள பிராமணரை 'கங்கா புத்ர' என்றும், தெலுங்கநாட்டு வீரவளஞ்சியரைப் 'பார்வதி புத்ர' என்றும் குறிப்பிடும் வழக்குகளை இதனுடன் ஒப்பிட்டு நோக்குக. தமிழிலும் ஆண்மகன், பணிமகன், பெருமகன் என்னும் சொற்களில் 'மகன்' முதனிலைப் பொருளேற்ற ஆண்பாலீறுதல் காண்க.

சத்ய புத்த அதியமான் என்னும் கல்வெட்டுத் தொடரில் உள்ள புத்த (புத்ர) என்னும் சொல் மதிப்புரவு குறித்த வெற்றடைமொழி என்பதற்கு மேலும் ஒரு சான்று நீலகேசியில் காணப்படுகிறது. சமண சமயத்தின் கிளைப் பிரிவாகிய ஆசீவக சமயத்தைத் தோற்றுவித்தவர் மன்கலி கோசலர். இவர் பெயர் மன்கலி புத்த என்று சமண நூல்களிலும் மற்கலி (மன்கலி) என்று தமிழிலும் (நீலகேசி — ஆசீவக 3) வழங்கி வந்துள்ளது. சமணபவுத்தர்கள் இயற்பெயருடன் புத்த (புத்ர) என்னும் பின்னடை சேர்த்துக்கொள்கின்றனர்.

---

** K. G. Sesha Aiyar inclined to identify on philological grounds the Atiyamans of the Sangam age with the *Satiyaputra* of Asoka's inscriptions. He says the initial a (In Atiyaman) becomes *ha,* which again becomes sa in prakrit; and man (*மான்*) is abbreviation for *magan* which means putra, and thus Atiyaman becomes Satiya putra on the anology of Ceraman equals Kerala putra......

The identification here suggested of Atiyaman with *Satiyaputra* satisfactorily accounts for the presence of the particle *'i'* in the name appearing Asoka's edict.

(T. V. Mahalingam, 1977 'Early South Indian Palaeography, p. 186.)

இதிலிருந்து அதியன் என்னும் பெயரே சதிய என ஈறு குறைந்து முதல் திரிந்துள்ளது என நன்கறியலாம். பாண்டியனும் சோழனும் நாட்டாற் பெயர்பெற்றமையின் அசோகனின் கல்வெட்டில் புத்த (புத்ர) ஈறு சேரவில்லை. சேரன் நாட்டாற் பெற்ற பெயர். சேரல் (சேரலன்) அதியன் என்பன மன்னர் பெயர் ஆதலின் சேரலன் கேரளபுத்திரஞகவும் அதியன் சதிய புத்திரஞகவும் உருமாற வேண்டிய நிலை ஏற்பட்டது. இஃதறியாத வரலாற்ருசிரியர் பலரும் சத்தியம் தவருத சத்திய புத்திரன் இந்தியாவில் எப்பகுதி மன்னன் என்று ஆராயத் தொடங்கி விட்டனர்.

'பொய்யா எழினி' என்று புறநானூறு (230-6) கூறுவது, சத்திய புத்திரனைக் குறிப்பிடுவதே எனப் பண்டாரகர் நாகசாமி கூறுகிருர். இஃது எவ்வாற்ருனும் பொருந்தாது. பொய் கூருமை, சொன்ன சொல் பிழையாமை என்னும் பொருளில் அதியமான் அடைமொழி பெற்றிருந்தால் அவன் பெயர் சத்திய சீலன், சத்திய விரதன், சத்தியவாக்கன் என்றிருக்கும். சத்தியபுத்திரன் என்று கூருர். பொய் கூருமை குறிப்பிட்ட ஒருவர்க்கு மட்டும் இயைந்த பண்பன்று. ஏழை எளியரும் கல்லாத பணியாளரும்கூடப் பொய் கூருச் செவ்வியராகலாம். பொய்யாமை முப்பொருள் பயக்குஞ் சொல். பொய் கூருமை என்னும் பண்பு—முதற்பொருள்; தன் தொழிலில் பொய்க்காமை என்னும் வினைத்திறம்—இரண்டாம் பொருள்; சொன்ன சொல் மாருமை—மூன்ரும் பொருள். பழைய உரையாசிரியர் (புறம் 230-6) இம் மூன்ரும் பொருள் கூறியிருப்பதும் பொருந்தாது. மூன்ரும் பொருள் கருத்தாயின், 'பொய்யா மொழி எழினி' என விதந்து கூறல் வேண்டும்.

பொய்யா எழினி—பெய்தல் தொழிலில் பொய்க்காத மேகம்.

**பொய்யா** எழினி—கொடையளித்தல் தொழிலில் பொய்க்காத (தவருத) மன்னன் எழினி.

பொய்யா வாள்—இலக்கைத் தாக்குவதில் பிழையாத வாள்.

பொய்யா நாவன்—கொடுத்த உறுதிமொழி பிழையாதவன்.

*"மாரி பொய்க்குவ தாயினும்*
*சேரலாதன் பொய்யலன் நசையே"* (பதிற்று. 18-12)

என்னும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் பொய்யாத் (கொடை) தன்மையை ஒப்பிட்டுக் காண்க. பண்டைப் புலவர்களின் விழுமிய சொல்லாட்சிகளை வழக்கும் பொருளும் நாடி

உய்த்துணர்தல் வேண்டும். மேலோட்டமான பொருளுணர்வு ஆய்வு நோக்காளர்க்குச் சிறிதும் பயன் நல்காது.

சம்பைக் கல்வெட்டில் குறிக்கப்பட்ட அதியமான் நெடுமான் அஞ்சி எக்காலத்தவன் என்பது அடுத்த வினா. அசோகன் குறித்த 'சதியபுத்ர' அதியமான்கள் அனைவர்க்கும் பொதுவான சொல். அதியமான் மரபினர் கி. பி. 12ஆம் நூற்றாண்டு வரை தகடூரில் மட்டுமன்றித் தமிழகத்தின் பலவிடங்களிலும் சேர நாட்டிலும் கன்னட நாட்டிலும் வாழ்ந்திருக்கின்றனர். தன் முன்னோர் பெயரை எந்தக் காலத்தில் எந்த இடத்தில் வாழ்ந்த அதியமான் மரபினனும் தனக்குப் பெயராகக் கொண்டிருக்கலாம்.

ஔவையார் காலத்து அதியமான் அரிசில்கிழாராலும் பெருஞ்சித்திரனாராலும் எழினி என்று அழைக்கப்படுகிறான். அவன் மகனும் பொகுட்டெழினி. இன்றும் தருமபுரி மாவட்டத்தில் உள்ள கல்லாத உழவர் குடிமக்கள் பலர் எழினி (எளனி) என்னும் இயற்பெயர் பூண்டிருப்பதைப் பார்க்கலாம். பதிற்றுப் பத்து 'அதிகமான்' என்கிறது. புறநானூறு 'அதியமான்' என்கிறது. பதிற்றுப்பத்தில் (32-10) வரும் நெடுமிடலை 'அதியமான் நெடுமான் அஞ்சி' என்று சென்னைப் பல்கலைக்கழக அகராதி குறிப்பிடுகிறது. நெடுமிடல் அஞ்சி என்று உரையாசிரியர் கூறுகிறார். களங்காய் கண்ணி நார்முடிச்சேரல் (பதிற்று 32-10) காலத்தில் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை காலத்திலும் தகடூராண்ட அதியமான்கள் ஒரே பெயருடையவராய் இருந்தனர் எனத் தோற்றுகிறது.

தருமபுரி அதியமான் கோட்டை கல்வெட்டு (A. R. No. 201. 1910) கி. பி. 8ஆம் நூற்றாண்டில் தகடூராண்ட அதியமான் எழினியைக் குறிப்பிடுகிறது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் தகடூராண்டவன் அதியமான் இராசராசன் எனப்படுகிறான். நிகரிலி சோழ மண்டலம் எனப்பட்ட கங்கநாட்டில் தகடூர் நாட்டைச் சேர்ந்த 'பெரும்பேர்' என்னுமிடத்தில் 'தகடூர் கிழவன்' என்பான் கி. பி. 1164 அளித்த கொடையைக் கல்வெட்டுக்கள் (A. R. 18. 1900 A. R. 207, 1901) குறிப்பிடுகின்றன.

கன்னட நாட்டுக் கொள்ளேகாலம் வட்டத்திலுள்ள தகடூரைத் தலைநகராகக் கொண்டு அதியமரபினர் நாடாண்டனர்.

அதியமானை அதியமரச என்று கன்னடக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. அதியமானை எதிர்த்த கன்னட மன்னர் தம்மை

அதியனுக்கு எமன் (அதியமனயம்) அதியமானை அடக்குபவன் (அதியம நிவாரண), அதியமானின் செருக்கடக்குபவன் (அதியம மத நிவாரண) என்றெல்லாம் குறிப்பிட்டுக் கொண்டிருக்கின்றனர்.

இவற்றைக் காணும்போது ஒருகாலத்தில் பீடும் பெருமையும் விளங்க வீற்றிருந்த அதியமான்களின் மரபு நாட்டின் நாலாபுறங்களிலும் சிதைந்த பிற்காலத்தில், செந்தமிழ் கொடுந்தமிழாக மாறிய கோலத்தில் சம்பைக் கல்வெட்டு தோன்றியிருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

தகடூர் நாட்டில் சமண பவுத்த முனிவர்களின் ஊடாட்டம் அல்லது வேற்றுச் சமயப் பெருக்கம் குறித்து ஔவையார் எங்கும் குறிப்பிடவில்லை. நீல மணிமிடற்றுச் சிவனை மட்டும் குறிப்பிடுகிறார். களப்பிரர் காலத்திலிருந்து பத்தாம் நூற்றாண்டு வரை சமண சமயத்தின் ஊடாட்டம் தமிழகத்திலிருந்திருக்கிறது. ஆதலால் கி. பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டு வரையிலான இடைக்காலத்தில் வாழ்ந்த ஏதோவொரு அதியமான் நெடுமானஞ்சி அளித்த கொடையைக் குறிப்பதாகவே சம்பைக் கல்வெட்டைக் கருத வேண்டும். சதிய புத்ர என்பதும் அதியமான் என்பதும் ஒன்றே என்பதை மறந்துவிட்ட பிற்கால சமண அல்லது புத்த சமயத்தைச் சார்ந்தவன் தந்த சொற்றொடராக இருக்க வேண்டும்.

இக்கருத்தை அதில் பயின்றுள்ள 'பாழி' என்னும் சொல்லாட்சியும் விளக்குகிறது. தொல்காப்பியத்தில் பாழி என்னும் சொல் போர் என்னும் பொருளில் வழங்கியது.

*"பாழி கொள்ளும் ஏமத் தானும்"*　　—(தொல். பொ. 72)

பாழி என்னும் சொல்லுக்கு இடம், முனிவர் உறையுள், சிறுகுகை என்னும் பொருள் தோன்றியது, பிற்காலத்தில்தான்.

*பாழி - குகை (திவா.)*

*பாழி – முனிவர் உறைவிடம்.*

*"பூதந் தம்பாற் பாட்டிக்கொண்டுண்பவர் பாழிதோறும்"*
(தேவா. 186 : 5)

*பாழி - கோயில்*

*ஐயன் பாழியில் ஆணை போர்க்குரித்தாம் அன்று (ஈடு.1.1.வ)*

*பாழி - சிறுகுளம் (தொல். சொல். 400 உரை).*

கி. பி. ஆறு ஏழாம் நூற்றுண்டுகளில் முனிவர் உறை விடத்தைப் 'பாழி' என்னுஞ்சொல் பெருகக் குறித்திருக்கிறது.

முனிவர்க்கு உறைவிடம் அமைக்கும் கல்வெட்டுகளில் அம் முனிவர் பெயரும் குறிக்கப்படுவது வழக்கம். சம்பைக் கல் வெட்டில் முனிவர் பெயர் காணேம். முனிவர் பெயர் வடசொல் லாக இருந்தால் அது கடைக்கழகக் காலத்தது அன்று என்பது மேலும் தெளிவாகி விடும்.

கடைக்கழக இலக்கியங்களில் ஒரு சில வடசொற்கள் பயின்றிருப்பதை ஏந்தாகக் கொண்டு எல்லாம் வடமொழிக் கொடையாகக் காட்டலாகாது. ஆரியர் தென்னுடு புகுமுன் தமிழ் தனித்தமிழாகவே இருந்தது என்னும் உண்மையை ஓர்ந்து, தமிழிலிருந்து பிறமொழிகள் என்னென்ன பாங்குகளைக் கொடை யாகப் பெற்றிருக்கின்றன என்று ஆய்வதே தமிழுக்குச் செய்யும் உண்மைத் தொண்டு. வடமொழியிலிருந்து பிறமொழிகளுக்கு என் னென்ன சென்றுளது என்பது வடமொழி ஆய்வு நிலையங்கள் ஆற்றவேண்டிய பணி. அதனைத் தமிழாய்வாளர் தம் பணியாகக் கொளின் அவர் தமிழ்நலனினும் பிறமொழி நலனே பெரிதாகக் கருதும் பெற்றியராவர்.

தமிழி எழுத்தைக் கடைக்கழகக் கால எழுத்து எனக் கூறு கின்றனர். ஓலைச் சுவடியில் எழுத வட்டெழுத்துக்கு முந்திய கண்ணெழுத்தையும் கல்வெட்டுச் செப்பேடுகளில் எழுதக் கோலெழுத்தையும் பண்டையோர் ஆண்டதாகப் பாவாணர் கூறுகிறுர். வட்டெழுத்தின் பழைய வடிவாகிய கண்ணெழுத்து எங்கும் கிடைக்கவில்லை. சமணர் புதுக்கிய 18 வகை எழுத்து வடிவங்களும் பௌத்தர் புதுக்கிய 64 வகை எழுத்து வடிவங் களும் இந்திய மொழிகளின் வரிவடிவங்களில் பெருமாற்றம் விளைத்தன. பண்டைத் தமிழ் எழுத்து உருமாறியது. பெரும் பாலும் சமணமுனிவர் குகைகளில் மட்டும் கிடைத்துள்ள தமிழி எழுத்தைப் பழைய கோலெழுத்து எனக் கொள்ளலாமா அல்லது சமண பவுத்த சமய வரவின்போது திரிபுள்ள கோலெழுத்தாகக் கொள்ளலாமா என்பதை அறிஞர்கள் மேலும் ஆராய வேண்டும் என்று விரும்புகிறேம். தமிழி (தமிழ் பிராமி) எழுத்தில் ழகரம் மட்டும் இன்றைய வடிவை ஒத்திருக்க மற்ற எழுத்துகளனைத்தும் முற்றிலும் வேறுபடுவது. வடவர் தம் எழுத்துகளைத் தெற்கே புகுத்தியபோது தவிர்க்க முடியாமல் பழந்தமிழ் ழகரத்தை மட்டும் சேர்த்துக்கொள்ள நேர்ந்ததாலா என்பதும் ஆராயத் தகுந்தது.

கல்வெட்டுக்களின் காலம் அறிய காரியக் காலக்கணிப்பு (Carbon dating system) மேனுட்டிலுள்ளதுபோல் இங்கும்

பயன்படுத்தப்படுகிறதா? காலத்தைச் சரியாகக் கணிக்கும் அறிவியல் முறைகள் மேற்கொள்ளப்படுகிறதா? என்றறிந்த பின்பே காலக் கணிப்புகள் ஒப்புக்கொள்ளத்தக்கனவாகும்.

பண்டைத்தமிழ் எழுத்துச் சான்றுகளை மேலும் பெறும் பொருட்டு, அதியமான் கோட்டை, உறையூர், பூம்புகார் ஆகிய இடங்களிலும் அகழ்வாராய்ச்சி விரிவாக மேற்கொள்ளப்பட வேண்டும்.

எல்லாவற்றுக்கும் மேலாகத், தொன்முது உலக நாகரிகத் தொட்டிலாகவும், தமிழின் பிறப்பிடமாகவும் தமிழனின் சிறப்பிட மாகவும் பாண்டியன் தமிழ்க் கழகம் நிறுவிய தலைநிலமாகவும் விளங்கிய குமரிக்கண்ட நாகரிக வளர்நிலைகளையறியக், குமரி முனைக்குத் தெற்கே அடிக்கடலாய்வு உடனடியாக மேற்கொள்ளப் பட வேண்டும்.

பல்லாயிரக்கணக்கான தமிழ் ஓலைச் சுவடிகளும் செப்பேடும் இயற்கையாலும் செயற்கையாலும் அழிக்கப்பட்ட நிலையில் அடிக்கடலாய்வு ஒன்றுதான் பழந்தமிழ் வரலாற்றை உள்ளவாறு உலகிற்குணர்த்த வல்லது.

கி. பி. முதல் நூற்றாண்டு தொடங்கி இற்றை நாள் வரை கிடைக்கும் வரலாற்றுச் சான்றுகள் தமிழ் மரபின் உண்மை வரலாற்றை நிறுவப் போதியனவல்ல. கடைக்கழகக் காலத்திற்கு முந்திய வரலாறு ஆரியத்தாக்கம் அறவே இல்லாதது. அதனை முழுமையாகச் செவ்வனே ஆராயப்புகின், தனித்தமிழ்க் கலைவளம், அறிவியல் செழுமை, தொழிலியல் வளமை ஆகியவற்றைத் தொல் பொருள் துறை நன்கு ஆராய்ந்து வலிவுற நாட்ட முடியும்.

———

## கற்பனையும் பொய்யும்

கற்பனை வேறு; பொய் வேறு. கற்பனை நிகழாத ஒன்றாக இருக்கலாம். அதனாலேயே அது பொய்யாகிவிடாது. தீமை யற்ற நன்மை பயப்பது கற்பனை. அதைப் பொய் என்று சொன்னாலும் நன்மை தீமையாகி விடாது. வள்ளுவர்,

"பொய்மையும் வாய்மை யிடத்த, புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்றதுவும் இதனை உணர்த்தவேயாம்.

சிலம்புச்செல்வர் ம. பொ. சிவஞானம்
வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, பக். 275.

# கொற்கை–3.

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

கொற்கையில் ஒரு வன்னிமரத்தைக் காண்கிருேம் மதுரையில், புகழ்வாய்ந்த வன்னிமரம் உண்டு! வன்னியடி விநாயகர் ஆங்கு வீற்றிருக்கின்ருர். வன்னியும் கிணறும் இலிங்கமும் வரவழைத்த திருவிளையாடலொடு அதனைத் தொடர்பு படுத்திக் கூறுகின்றனர். ஆனல் கொற்கை வன்னியின் பழைமையை அறுதியிட்டுரைக்க மரநூல் வல்லார்க்கே இயல்வ தாம்.

கொற்கை வன்னி, சில ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்த சீர்மை, அதன் தோற்றத்திலேயே புலப்படுகிறது. நிலத்தொடு நிலமாகப் படிந்து நெடுமுடி யண்ணலெனக் கிடந்து, நிமிர்ந் தோங்கிப் பசுமைக் கோலம் காட்டும் அதன் அருமை, பார்ப்பவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்! உள்ளீடற்ற கூடென அடி மரம் பட்டையொடு கிடப்பினும் அது வழங்கும் வளமைக் காட்சி காண்பாரை வயப்படுத்த வல்லதாம்!

"கொற்கை வன்னி, குரங்கணி ஆல், ஆழ்வார் திருநகரிப்புளி" என வழங்கும் பழமொழியைக் கொற்கை அன்பர்கள் கூறுகின்றனர். மேலைத் தொடர்சார்ந்த குரங்கணியோ என நாம் நினைக்க இடம் வைக்காமல், 'குரங்கணி கொற்கை சார்ந்ததோர் ஊர்' என் பதையும் சுட்டுகின்றனர்.

வன்னிமரச் சூழலைப் பார்க்கிருேம். அதன் அருகில் 6'×6' அளவில் ஒரு செங்கல் தளம் தன் பழைமை காட்டிக்கொண்டு உள்ளது. அதன் பக்கத்தில் கொற்கைக் காசுகளில் காணப்படு கின்ற 'காலடி தூக்கும் வானர' வடிவச் சிலை ஒன்றுள்ளது! அதுவும் பீடமின்றி நிலத்தின் மட்டத்திலேயே உள்ளது.

கொற்கை வன்னிக்கு நேர்வடக்கில், 7, 8 மீட்டர் தொலைவில் 'முழுமதி முக்குடை அச்சுதன்' அமர்ந்த கோலத்தில் அருமையாய்க் காட்சி வழங்குகிருர். இதுகாறும் ஏற்பட்டுள்ள சிதைவுகளுக் கெல்லாம் ஈடுதந்து, சிதையாத சீரிளமையுடன் செம்மாந்து வீற்றிருக்கும் அப் பெருமகனுர் திருவுருவம் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறது! அப்படியே அவர் அழகை அள்ளிப் பருகுவார்போல அமைந்து நிற்கிருேம்! சிற்பத் திறனை வியப்பதா? அதன் பழைமையை வியப்பதா?

அறிவர் அமர்ந்துள்ள அழகுக்கோலம், நிலத்தின் மட்டத்தில் உள்ளது. அவர் அமர்ந்துள்ள பீடத்தை அகழ்ந்து தான் காணவேண்டும். அது, புதைந்து மண்மேடிட்டுப் போயுள்ளது நன்கு தெரிகின்றது! “1971இல் அங்கு அகழ்வு செய்யப்பெற்றது என்பதையும், அசோகர் காலத்துப் பிராமி எழுத்து அமைந்த தாழி ஒன்று அகப்பட்டது என்பதையும்” அன்பர்கள் உரைக்கின்றனர். கொற்கைப் பழைமைக்கு இவ் வன்னியும் இம் முக்குடைச் செல்வரும் செவ்விய சான்றுகள் என்று நாம் நினைக்கும்போதே கொற்கைத் தமிழ்மன்றத் தலைவர் புலவர் திரு. சிவசங்கு அவர்களும் செயலாளர் புலவர் திரு. ஐயாத் துரை அவர்களும் அச்சிடப்பெற்ற அறிக்கை ஒன்றை நம் கையில் சேர்க்கின்றனர்.

கொற்கை மண்ணின் கொழுமணம் அவர்கள் கொடுத்த அறிக்கையில் மிளிர்கின்றது. இலக்கியத்தாலும், வரலாற்றாலும், உலகவலம் வந்த பெருமக்கள் குறித்துவைத்த குறிப்புகளாலும் அறியப்பெறும் செய்திகளையெல்லாம் ஒருங்கு தொகுத்துரைக்கும் அவ்வறிக்கையைக் கண்டு களிப்படைகிறோம். தொல்பொருள் ஆய்வாளர் செய்த அகழ்வு ஆய்வு, கொற்கையைச் சூழ்ந்துள்ள ஊர்கள் ஆகியவற்றையும் அறிகிறோம்.

கொற்கைத் துறையின் காவல் கடவுளராக விளங்கிய துறையப்பர் கோயில் கொண்டுள்ள அகரம்!

அறிவன் அமர்ந்து அருளுரை வழங்கிய அறிவன் புரமாகிய அரியபுரம்!

இத்தாலி நாட்டில் இருந்து சுற்றுலாக்கொண்டுவந்த மார்க்க போலோ இறங்கிய பழைய காயல்!

சங்கப் பெண்பாற் புலவருள் ஒருவராகிய நப்பசலையார் தோன்றிய மாறோகம் ஆகிய மாறன் மங்கலம்! தொல்காப்பிய உரையாசிரியராகிய சேனாவரையர் விளங்கிய ஆற்றூர்!

பழங்காலக் காட்டரணமாக விளங்கிய இடைக்காடு, காவற்காடு, கோவன்காடு, குமரிக்காடு, தெக்காடு, கோட்டைக்காடு! ஏமமாக (பாது காப்பாக) அமைந்த ஏமராசன் கோயில்! ஊர் காவல் கடனேற்ற ஊர்காத்த பெருமாள் கோயில்! கோட்டைக் காவல் கடனேற்ற கோட்டாளமுத்து கோயில்! தென்னெல்லைக் கோட்டையாக விளங்கிய தென்பேரெயில் என்னும் தென்திருப்பேரை!

பாண்டியனின் சிறுபடைப் பிரிவின் தங்கலாக இருந்த சிறுத் தண்டநல்லூர் என்னும் சிறுத்தொண்டநல்லூர்!

அவன் பெரும்படைப் பிரிவின் தங்கலாக இருந்த **பெரும் படை ! பெரும்படைச் சாத்தன் கோயில் !** தவசக் கிடங்காக (கொட்டாரமாக) இருந்த **கொட்டாரக் குறிச்சி !**

குற்றவாளிகளைக் கழுவில் ஏற்றுதற்கு இடமாக இருந்த **கழுவன்திரடு !**

சங்கு—கிளிஞ்சில்—என்னும் பெயரே தன்பெயராய் எழிலுடன் விளங்கும் ஏரல் !

இத்தகு பெயரிய பெருமைமிக்க ஊர்களை நினைத்து வியப்படைகிறோம்! கொற்கைப் பழைமைக்கு இன்னும் சான்று வேண்டுமோ எனப் பூரிக்கிறோம்! அப் பூரிப்பின் இடையே எண்ணற்ற எண்ணங்கள் பொங்கி வழிகின்றன !

உலகறிந்த கொற்கையை ஊரும் அறியாமல் செய்துகொண்டிருப்பது எத்தகைய கொடுமை!

நேற்றை நிகழ்ச்சியை 'வாணம்' விட்டுக் காட்டிக் கொண்டிருக்கும் வையகத்தில், தொன்முது நாகரிகத் தொட்டிலைப்பற்றி நாம் சொல்லளவில்கூட வெளிப்படுத்தவில்லையே !

சுற்றுலாத்துறையும் அகழ்வாய்வுத்துறையும் தொல்பொருள் ஆய்வரும் இருந்தும்—இப் பழங் கொற்கையைப் புறக்கணித்துக் கொண்டிருக்க இந்த இருபதாம் நூற்றாண்டிலும் எப்படித்தான் எண்ணம் வருகின்றதோ?

அக்கசாலை ஈசுவரர் கோயிலுக்கு முன்னே இருக்கும் வளமான குளத்தில் படகுத்துறை யமைத்துச், செழியநங்கை கோயிலைச் சூழ நீராழி மண்டபம் அமைத்துச் சுற்றுலா மையமாக்கிவிட்டால்—முழுமதி எழிலுற விளங்கும் நாளில் அவ் வெள்ளி நீர் உருக்கின் மேல் ஓடம் தள்ளிக்கொண்டு சென்றால்—பழங்கொற்கைப் புதுப் பொலிவைப் பார் அறியுமே ! போட்ட தொகையையும் கூடப் போகவிடாமல் ஒன்றுக்கு இரண்டாய் அள்ளிக்கொண்டிருக்கலாமே !

பூம்புகார்ப் பெருமையைப் புதிய அமைப்பாய் உருவாக்கிப் புகழ்செய்த அரசு, பழங்கொற்கைப் பகுதியை எளிய முயற்சியால் பெரிய பயன் கொள்ளக் கருதவில்லையே !

அறிவனார் அழகுத் திருமேனியைக் கல்லறைக் கண்டும், அகழ்வாய்வு மேற்கொண்டும், பழந்தடயங்கள் பற்பல எடுத்தும் தொல்பொருள்துறை அயர்ந்துபோய் அமைந்துவிட்டதே !

பழங்கொற்கைப் பகுதிக்குப், புதிய அரசியல் தேர்தல் இல்லாமலா போய்விட்டது? சட்டமன்ற உறுப்பினர்களும், பாராளு மன்ற உறுப்பினர்களுமாக வீற்றிருப்பவர்களுக்கு இதை எடுத் துரைக்கும் விளக்கம் மட்டும் கெட்டுப்போய்விட்டதோ? தேர் தலுக்குத் தேடிவந்து ஊருராக—வீடு வீடாக—நிற்கும்போதா வது—இதனைக் கொள்கையாகக் குறிக்கக் கொற்கை வாக்காளப் பெருமக்களுக்கு வாய்வரவில்லையோ?

ஒட்டகத்துக்கு ஒருபக்கமா கோணல்? கோணலை நிமிர்க்கும் கொள்கைவீரர் வருக! கொற்கைத் தமிழ்ச்சங்க முயற்சி வெல்க என வாழ்த்துகிறோம்!

கொற்கையைப் புதுக்கிச் சுற்றுலா மையமாக்க வேண்டு கிறோம்.

———

## நீத்தார் பெருமை—ஒரு விளக்கம்

பிறப்பின்றி இறப்பில்லை; பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்படுவது இருப்பு. ஆகவே இறந்தார் எனவே பிறந் திருந்து இறந்தார் என்பது பெறப்படும். மிகுதி குறிப்பன கடன்மணல் முதலாய பிறவும் உளவாக இறந்தார் தொகையை உவமித்தது, நீத்தார் பிறப்பிறப்புக்களினின்று வீடு பெற்றார் என்பது தோன்ற, 'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்' என்று திருவாதவூரடிகளும், 'அன்னை எத்தனை அன்னையோ அப்பனெத்தனை அப்பனோ, அன்றுமுத லின்றுவரைச் சனன கோடி எடுத்தெடுத்திங்கி யாதனையா லழிந்த தல்லால்' என்று பிற்காலத்துப் பிற சான்றோரும் பிறப்பிறப்பின் அளவின்மை அறிவுறுத்திட்டார்கள். பிறந்து பிறந்து இறக்கும் அப்பொது வியல்பின் நீங்கியோராதலால் நீத்தார் சிறப்புடையராயினர். தன்கட் டோன்றுவனவெல்லாம் அழிதன் மாலையவாதலின் அவற்றை நோக்கத் தான் நிலைபேறுடையதென்பது பற்றி இவ்வுலகம் நிலம் எனவும் வையம் எனவும் கூறப்படும்; நிலைப்பது நிலம்; வைகுவது வையம். வைகுதல் - தங்குதல். நிலையாத உலகத்தை நிலையென மயங்கி மாண்டோர் என்பது பட 'வையத் திறந்தார்' என்றார்.

நாகை. சொ. தண்டபாணிப்பிள்ளை,

திருக்குறள் அறத்துப்பால், தண்டபாணி

விருத்தியுரை பக். உ௮.

# உளநிலைப் பெயர்கள்

[டாக்டர் கு. பரமசிவன்,

*தமிழ்த்துறைத் தலைவர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.]*

**பருப்பொருளும் நுண்பொருளும் :**

கல், இரும்பு முதலியவை பருப்பொருள்கள். இப் பொருள்களைக் கண்ணால் பார்த்தல் கூடும். இவற்றுக்கு வடிவமுண்டு. இவற்றைக் குறிக்கும் சொற்களைப் **பருப்பொருட் பெயர்கள்** (Concrete nouns) என்கிறோம். அன்பு, உயிர் முதலியவை நுண் பொருள்கள். இப் பொருள்களைக் கண்ணால் பார்த்தல் இயலாது. இவற்றுக்கு வடிவம் இல்லை. இவற்றைக் குறிக்கும் சொற்களை **நுண்பொருட் பெயர்கள்** (abstract nouns) என்கிறோம். பொருள்களுக்குப் பெயரிடும் அளவில்தான் இப் பாகுபாடு தேவையென்றால் இதற்கு அவ்வளவு சிறப்பில்லை. மொழியின் அமைப்பிலும் (structure) இப் பாகுபாடு தேவைப்படுகிறது என்றால்தான் இதைப்பற்றி மொழியாராய்ச்சியாளர்கள் கவலைப்பட வேண்டும்.

**பாகுபாட்டின் தேவை :**

சில சொல்லமைப்புக்களையோ தொடரமைப்புக்களையோ விளக்குவதற்கு இப் பாகுபாடு தேவை என்று காட்டுவதே மொழியமைப்பிற்கும் இப் பாகுபாட்டிற்கும் உள்ள தொடர்பினை எடுத்துக்காட்டுவதாகும். அவ்வாறு காட்டுவது எளிது. பொதுவாகப், பெயரடைகள் (adjectives) பெயர்ச் சொற்களைச் சிறப்பிக்கும் என்பது உண்மையே ஆயினும் எல்லாப் பெயரடைகளும் எல்லாப் பெயர்ச் சொற்களையும் சிறப்பிப்பது இல்லை. சிலவகைப் பெயரடைகள் பருப்பொருட் பெயர்களைச் சிறப்பிக்கின்றன; நுண் பொருட் பெயர்களைச் சிறப்பிப்பது இல்லை. சான்றாக,

(1) வட்டக் கல்

என்று சொல்லலாம். ஆனால்

(2) வட்ட அன்பு

என்று சொல்ல முடிவதில்லை. இவ்வாறே

(3) ஒரு மீட்டர் நீளமுள்ள இரும்பு

என்பது சரி.

(4) ஒரு மீட்டர் நீளமுள்ள உயிர்

என்பது சரியில்லை. பருப்பொருள்கள் வடிவமுடையவையாகவும், நுண்பொருள்கள் வடிவமற்றவையாகவும் இருத்தலே இதற்குக் காரணம். வேறுவகையில் சொன்னால், எவ்வகைப் பெயரடைகள் எவ்வகைப் பெயர்ச்சொற்களைச் சிறப்பிக்கும் என்று விளக்க முற்படுவோமாயின், பருப்பொருட்பெயர்கள், நுண்பொருட் பெயர்கள் என்னும் பாகுபாடு தேவையாகிறது. அதனாலேயே இப் பாகுபாடு மொழியமைப்பில் பங்கு பெறுகிறது என்று சொல்கிறோம்.

**ஒரு வேறுபாடு உண்மையா?**

பருப்பொருட்பெயர்களுக்கும் நுண்பொருட்பெயர்களுக்கும் இன்னொரு வேறுபாடு இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவ் வேறுபாட்டின் உண்மை நிலையை ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

நுண்பொருட் பெயர்களோடு—ஒடு என்னும் உடனிகழ்ச்சி உருபும்—ஆய்/-ஆக என்னும் வினையெச்ச உருபும் வேறுபாடின்றி மயங்கிவரும் என்றும், பருப்பொருட்பெயர்களோடு அவை அவ்வாறு வருவதில்லை என்றும் சிலர் கூறுகின்றனர் (எ. கா. **S V. Shanmugam 1971 : 28**). இவர்களுடைய கருத்தை முதலில் விளக்குவோம்.

(5) அநசூயை இரும்போடு போனாள்

(6) அநசூயை இரும்பாய்ப் போனாள்

என்னும் இரண்டு வாக்கியங்களும் ஒரே பொருளுடையவை அல்ல. அத்திரி முனிவரை அடிப்பதற்காகவோ வேறு காரணத்துக்காகவோ அநசூயை இரும்பை எடுத்துக்கொண்டு போனாள் என்று வைத்துக்கொள்வோம். அப்போது (5)ஆம் வாக்கியம் பயன்படும். அத்திரி முனிவரது சாபத்தாலோ வேறு காரணத்தாலோ அநசூயை இரும்பாக மாறிவிட்டாள் என்று வைத்துக் கொள்வோம். அப்போது (6) பயன்படும். இவற்றால், பருப்பொருட்பெயரோடு—ஒடு உருபும்—ஆய்/-ஆக உருபும் சேர்ந்தால் பொருள் மாறுபடுகிறது என்பது விளங்கும். இனிச்,

(7) சீதை இலக்குவனிடம் அன்போடு பேசினாள்

(8) சீதை இலக்குவனிடம் அன்பாய்ப் பேசினாள்

என்னும் இரண்டு வாக்கியங்களும் ஒரே பொருளுடையவை. அவ்வாறே

(9) சகுனி கோபத்தோடு போகிறான்

(10) சகுனி கோபமாய்ப் போகிறான்

என்பவையும் ஒரே பொருளுடையவை. இக்காரணத்தால் நுண்பொருட்பெயரொடு—ஒடு உருபும் ஆய்/ ஆக உருபும் வேறுபாடின்றி மயங்கிவரும் என்றும், பருப்பொருட்பெயரோடு அவ்வாறு வருவதில்லை என்றும் சொல்கிறார்கள். அவர்களுடைய கருத்து ஏற்றுக்கொள்ளத் தகுந்ததே என்று தோன்றுகிறது, இல்லையா? உடனே அப்படி முடிவு செய்துவிடாதீர்கள். சற்று ஆழ்ந்து சிந்திப்போம்.

கீழ்வரும் வாக்கியங்களைப் பாருங்கள்:

(11) கிழவன் இன்னும் உயிரோடு இருக்கிறான்

(12) கிழவன் இன்னும் உயிராய் இருக்கிறான்

இவ் விரண்டும் பொருளில் வேறுபடுகின்றன. பத்துப்புட்டி சாராயத்தை ஊற்றிக்கொடுத்துக் குடிக்க வைத்த பிறகும், மூச்சு நின்றுவிடாமல் கிடக்கும் ஒரு முதியவரைச் சுற்றியிருப்பவர்கள் (11)ஆம் வாக்கியத்தைச் சொல்லலாம்; (12)ஐச் சொல்ல முடியாது. நூற்றியெட்டு இடங்களில் நைந்தும் கிழிந்தும்போன பிறகும், மாமனார் தன் திருமணத்துக்குப் பரிசளித்த பட்டு வேட்டியைப் பகட்டாகக் கட்டிக்கொண்டிருக்கும் முதியவன் ஒருவனைப்பற்றிப் பேசும்போது (12)ஐச் சொல்லாம்; (11)ஐச் சொல்ல முடியாது. இங்கு உயிர் என்பது நுண்பொருட்பெயராயினும், அதனோடு உடனிகழ்ச்சி உருபும் வினையெச்ச உருபும் வேறுபாடின்றி மயங்கி வரவில்லை.

இனி, மற்றொரு சிக்கலைக் குறிப்பிடவேண்டும். நாள்தோறும் இரவு ஏழுமணிக்குப் பாடநூலைக் கையில் எடுத்துக் கொண்டு உட்காரும் இருபதாம் நூற்றாண்டின் அதிசயப் பிறவியைப்பற்றிப் பேசும்போது,

(13) பிள்ளையாண்டான் ஒழுங்காய்ப் படிக்கிறான்

என்று சொல்லலாம்.

(14) பிள்ளையாண்டான் ஒழுங்கோடு படிக்கிறான்

என்று சொல்லமுடியாது. இங்கு **ஒழுங்கு** என்பது நுண்பொருட்பெயர்தான். எனினும் அதனோடு—ஒடு உருபு சேர்வதில்லை.

மேலே காட்டியவற்றால், நுண்பொருட்பெயர்கள் எல்லாவற்றோடும்—ஒடு உருபும்—ஆய்/—ஆக உருபும் வேறுபாடின்றி மயங்கிவருவதாகச் சொல்வது உண்மையன்று என்பது விளங்கும். இவ் வுருபுகள் **கோபம்** முதலியவற்றோடு சேரும்போதுதான்

பொருள்மாற்றம் இல்லை. உயிர் முதலியவற்றோடு சேரும்போது பொருள் மாறுகிறது. அன்பு, அறிவு, ஆசை, இரக்கம், உருக்கம், எரிச்சல், கோபம், மகிழ்ச்சி, வருத்தம், வெறுப்பு முதலிய பெயர்ச் சொற்களையெல்லாம் உளநிலைப் பெயர்கள் (Psychological Nouns) என்று அழைப்போம். இவற்றில் உணர்வு, உணர்ச்சி (feelings, emotions, sensations, perception) முதலியவற்றைக் குறிக்கும் பெயர்களெல்லாம் அடங்கும். உணர்வு முதலியவற்றைக் குறிக்கும் வினைச்சொற்களை உளநிலைப் பயனிலைகள் (Psychological Predicates) என்று மொழியியல் நூல்கள் அழைக்கும். (எ. கா. Postal, 1971) அம் முறையிலேயே நாமும் உளநிலைப்பெயர்கள் என் கிறோம். இவ் வுளநிலைப்பெயர்களோடுதான் உடனிகழ்ச்சி உருபும் வினையெச்ச உருபும் வேறுபாடின்றி மயங்குகின்றன; அஃதாவது ஒரே பொருளைத் தருகின்றன. இதற்குக் காரணம் என்ன என்று இப்போது பார்ப்போம்.

**ஒரு பொருளனியல் விளக்கம் :**

பொருளனியல் (semantics) அடிப்படையில், ஒரு தொழில் நிகழும்போது ஒருநிலை (State) உடன் நிலவுகிறது என்பதும், ஒரு தொழிலைச் செய்யும்முறை அந்நிலையாய் அமைகிறது என் பதும் ஒன்றே அன்றோ? பேசுதலாகிய தொழிலும் கோபமாகிய உளநிலையும் ஒருங்கே நிலவுகின்றன என்று சொல்வதும், பேசுத லாகிய தொழிலைச் செய்யும்முறை கோபமாகிய உளநிலை என்று சொல்வதும் ஒன்றுதான். அதனாலேயே,

(15) சாந்தமூர்த்தி கோபத்தோடு பேசினார்

(16) சாந்தமூர்த்தி கோபமாய்ப் பேசினார்

என்னும் இரண்டு வாக்கியங்களும் ஒரேபொருளைத் தருகின்றன.

—ஓடு உருபுபெற்ற உளநிலைப் பெயர் தொழில் நிகழும்போது நிலவுகிற உளநிலையைக் குறிக்கிறது என்றும், —ஆய்/—ஆக உருபு பெற்றது உளநிலையும் செயல்முறையும் ஒன்றுவதைக் குறிக்கிறது என்றும் கூறினோம். அதற்கான சான்றுகளை இப்போது பார்ப்போம்.

பொதுவாகப், பேசு, சொல் போன்ற செய்திப் பரிமாற்ற வினைச் சொற்கள் (verbs of communication), ஓடு, படி போன்ற தொழில் வினைச்சொற்கள் (activity verbs), இரு, நில் போன்ற நிலைவினைச் சொற்கள் (stative verbs) முதலிய பலவகை வினைச்சொற்களோடு வரும்போதும் உளநிலைப் பெயர்களோடு இணையும் உடனிகழ்ச்சி உருபும் வினையெச்ச உருபும் ஒரே பொருளைத் தருகின்றன. ஆனால் நிலைமாற்ற வினைச்சொற்களோடு (change of state verbs),

உடனிகழ்ச்சி உருபினை ஏற்ற உளநிலைப் பெயர்கள்தாம் வருகின்றன. வினையெச்ச உருபினை ஏற்றவை வருவதில்லை; வந்தாலும் பொருள் வேறுபாட்டினைத் தருகின்றன. எ. கா.

(17-அ) அரங்கநாதன் கவலையோடு தூங்கினார்

(17-ஆ) அரங்கநாதன் கவலையாய்த் தூங்கினார்.

(18-அ) அகலிகை நிம்மதியோடு தூங்கினாள்

(18-ஆ) அகலிகை நிம்மதியாய்த் தூங்கினாள்.

தூங்கப் புகுந்தபோது அகலிகையின் உளநிலை எவ்வாறு இருந்தது என்பதை (18-அ) வும், தூங்கிய முறையை (18-ஆ) வும் கூறுகின்றன. கவலை என்பது தூங்கும்முறையாக அமையாது; ஆதலாலேயே (17-ஆ) வழுவாகிறது.

உடனிகழ்ச்சி உருபினை ஏற்ற உளநிலைப்பெயர் ஒருதொழில் நிகழுங்காலத்து உடன்நிலவிய நிலை (State)யைக் குறிக்கிறது என்று மேலே கூறினோம். தொழில்நிகழும் காலம் என்பது தொழில்தொடங்கும் காலமாகவோ நடைபெறும் காலமாகவோ இருக்கலாம். (18-அ) வில் நிம்மதியாகிய உளநிலை தூங்கத் தொடங்கியபோதும் இருந்திருக்கலாம்; தூங்கும்போதும் இருந்திருக்கலாம். சில உளநிலைகள் தொழில் தொடங்குமுன்னேயே தொடங்கித், தொடங்கிய பின்னும் நிலவலாம். வேறு சில அவ்வாறு தொடங்கிப் பின்பு நிலவாமலும் போகலாம்.

(19-அ) வாலி பரிதாபத்தோடு செத்தான்

என்னும்போது, வாலி சாகத்தொடங்குமுன்னும் தொடங்கியபோதும் (யார்மீதோ) பரிதாபப்படுவதாகிய உளநிலையோடு இருந்தான் என்பதே கருத்தாகும். சாவுநிலையில் எந்த உளநிலையும் இருக்கமுடியாது அன்றோ?

(19-ஆ) வாலி பரிதாபமாய்ச் செத்தான்

என்பது வாலி செத்தமுறையை உணர்த்துகிறதே யல்லாமல், அவனது உளநிலையைக் குறிக்கவில்லை. இவற்றால் உடனிகழ்ச்சி உருபினை ஏற்ற உளநிலைப் பெயர் தொழில்நிகழுங் காலத்தில் நிலவிய நிலையைக் குறிக்கிறது என்பதும், வினையெச்ச உருபினை ஏற்றது தொழில்முறையைக் குறிக்கிறது என்பதும் விளங்கும்.

**மேற்கோள்**

Postal, Paul M. (1971): Cross-Over Phenomena: New York: Holt, Rinehart and Winston, Inc.

Shanmugam, S. V. (1971): Dravidian Nouns: Annamalai Nagar: Annamalai University.

———

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியைத் தொகுப்பது எப்படி ?

[பன்மொழிப் புலவர் மு. சதாசிவம், எம். ஏ., எம். லிட்., டிப். லிங்.,]

(முன் பரல், ௬௪ ஆம் பக்கத் தொடர்ச்சி)

3. 'சொல்லின் தொகையறிந்த' அறிஞர்கள் சொற்களின் பழைய வடிவங்களை முதலில் தொகுக்க வேண்டும். (நெல்லைக்) குத்து என்பதன் பழைய வடிவம் குற்று என்பதாகும். முக்காடு என்பதன் பழைய வடிவம் முகக்காடு என்பதாகும். அதனால் இக்கால வடிவத்தை வைத்துக்கொண்டு வேர்ச் சொல் கண்டு பிடிக்க முயல்வது தவறு. சொற்களின் மிகப் பழைய வடிவங்கள் தாம் சொற்களின் வேர்களை, மூலங்களைக் கண்டுபிடிக்கத் துணை செய்வனவாகும். தமிழ்ச்சொற்களின் பழைய வடிவங்களில் சில தமிழில் வழக்கற்றுப் போயிருப்பினும் தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு முதலிய பிற திராவிட மொழிகளில் இவை பாதுகாத்து வைக்கப்பெற்றுள்ளன. பிற திராவிட மொழிகளின் சொல்லுருவங்கள் யாவும் 'திராவிட மொழிகளின் வேர்ச்சொல் லகராதி' (Dravidian Etymological Dictionery) என்ற நூலில் பேராசிரியர்கள் திரு பர்ரோ, திரு எம்னோ ஆகிய இருவராலும் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. இந்நூல், செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகரமுதலி உருவாவதற்கு உற்ற துணை புரிவதாக உள்ளது.

4. கடந்த ஈராயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழுடன் சமசுக்கிருதம் என்னும் வடமொழி நெருங்கிய தொடர்பு கொண்டு வந்துள்ளது. இதனால் தமிழில் ஆயிரக்கணக்கான வடசொற்கள் புகுந்துள்ளன. வடமொழியிலும் பல நூறு தமிழ்ச் சொற்கள் புகுந் துள்ளன. இதனால் சில சமயங்களில் வடசொல்லா, தமிழ்ச் சொல்லா என்று மயங்கும் நிலை ஏற்படும். ஆனால் நல்ல வேளையாக இந்தோ ஐரோப்பிய மொழிகளின் வேர்ச் சொற்களும், அவற்றுள் ஒன்றான சமசுக்கிருத மொழியின் வேர்ச் சொற்களும் கண்டு பிடிக்கப்பட்டுப் பல வேர்ச்சொல்லகராதிகளாக வெளிவந் துள்ளன. இவையும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியை விரைவில் உருவாக்குவதற்கு உறுதுணை புரிகின்றன.

5. திராவிடமொழிக் குடும்பத்தின் தலைமை மொழியான தமிழ்மொழி உலகின் பிற பகுதிகளில் வழங்கப்பெறும் மொழி களுடனும் ஓரளவு உறவு பூண்டுள்ளது. எடுத்துக்காட்டாகச், சித்தியன் மொழிக் குடும்பம், முண்டா மொழிக் குடும்பம், ஆப்பிரிக்க மொழிக் குடும்பம் முதலியவற்றுடன் ஓரளவு உறவு கொண்டிருக்கிறது. மேலும், இந்தி, மராத்தி, வங்காளம், ஒரியா, உருது முதலிய வட இந்திய மொழிகளுடனும் தொடர்பு

கொண்டு கொடுக்கல் வாங்கல்களைச் செய்துள்ளது. மேலும், தமிழகத்திற்குப் பல்வேறு மேலை நாட்டினர் வருகை புரிந்த போது போர்த்துகீசியம், பிரெஞ்சு, ஆங்கிலம், அராபிக், பெர்சியன் முதலிய மொழிகளுடன் தொடர்பு ஏற்பட்டதனால் தமிழில் இம் மொழிச் சொற்களும் ஏராளமாகப் புகுந்துள்ளன.

முதலில் தமிழில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களை யெல்லாம் தனியே பிரித்தறிந்துகொள்ள வேண்டும். பிறகு தூய தமிழ்ச்சொற்களின் வேர்களைக் கண்டறிய முனைய வேண்டும். அவ்வாறின்றி வடமொழி முதலிய பிற மொழிச் சொற்களைத் தமிழ்ச்சொற்களாக மயங்கி அவற்றின் வேர்ப் பகுதிகளைக் கண்டறிய முற்பட்டால் குன்று முட்டிய குருவி போல இடர்ப்பட நேரிடும். மேற் குறிப்பிட்ட எல்லா மொழிகளிலும் அகராதிகள் வெளிவந்திருப்பதால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியை எளிதில் தொகுப்பதற்கு அவையும் துணையாக நிற்கின்றன. ஆங்கிலத்தில் One, Eight, Cull முதலிய சொற்கள் தமிழில் உள்ள ஒண்ணு, எட்டு, கல்லு ஆகிய சொற்களுடன் ஒலியொற்றுமையும் பொருளொற்றுமையும் பெற்றிருப்பதனால் மட்டும் தமிழும் ஆங்கிலமும் தொடர்புடைய மொழிகள் என்ற அவசர முடிவுக்கு வந்துவிடக் கூடாது. இரு மொழிகளிலும் அச் சொற்களின் மிகப் பழைய உருவங்கள், மூலங்கள் எவை எனக் கண்டறிந்த பின்னரே மொழிகளின் தொடர்புபற்றி ஒரு முடிவுக்கு வர வேண்டும்.

6. சொற்பிறப்பியலகராதி தொகுப்பதற்குச் சொல் வடிவங்களுடன் அவற்றின் பொருள்களையும் அறிந்திருப்பது மிகவும் இன்றியமையாதது. பொருளறிவின்றி வெறுஞ் சொல் வடிவங்களைக் கொண்டு மட்டும் சொல்லின் மூலங்களைக் கண்டு பிடித்தால் அஃது அரைகுறை ஆராய்ச்சியாகவே முடியும். இதனால் பொருளியல் (Semantics) அடிப்படையில் தமிழ்ச்சொற்களின் பொருள் மாற்றங்களை வரலாற்று முறைப்படி தொகுத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

சுருங்கக் கூறின், மறைந்த பேரறிஞர் திரு பாவாணர் அவர்கள் விட்டுச்சென்ற பணியை முற்ற முடிப்பதற்கான கருவி நூல்கள் யாவும் இக்காலத்தே கிடைக்கின்றன; மொழி யியலறிவு பெற்ற தமிழறிஞர்களும் கிடைக்கின்றனர். அதனால் உண்மையான ஆர்வத்துடன் அரசு முனைந்தால் மொழியியலின் அடிப்படையில், வேர்ச் சொல்லியலின் அடிப்படைக் கொள்கைகளுக்கு (Principles of Etymology) மாறுபடாமல் உலகம் வியந்து பாராட்டும் வண்ணம் இவ்வகராதியை விரைந்து முற்றச் செய்ய முடியும் என்பதே என் நம்பிக்கை.

———

## ஆட்சிமொழித் துணுக்குகள்

[கோ. முத்துப்பிள்ளை]

### 3. PAPER WEIGHT

நல்ல குடும்பம் நமக்குத் தெரியும். இன்றுங்கூட நல்ல குடும்பங்கள் நாட்டில் நிறைய இருக்கின்றன! பல்கலைக் கழகமும் நமக்குத் தெரியும். இன்றுங்கூட அவை பெருகிக்கொண்டே வருகின்றன! ஆனால், "நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம்" என்பதைப் பாவேந்தர் பாரதிதாசன் எடுத்துக்கூறிய பிறகுதான், நாம் அதைத் தெரிந்துகொண்டோம். இதைப்போலவே Paper நமக்குத் தெரியும். "தாள்" என்று சொல்லிவிடுகிறோம். Weight என்பதும் தெரியும். "எடை" என்று சொல்லிவிடுவோம். ஆனால் Paper Weight நமக்குத் தெரியவில்லை! இரண்டு தமிழ்ச் சொற்களையும் இணைத்துத் "தாள் எடை" என்று சொல்லிவிடமுடியாது! அப்படிச் சொல்லிவிட்டால், கண்டனக் கணைகள் பொங்கியெழும் என்பதில் ஐயமில்லை. ஒரு சிலருக்கு இந்தத் தொல்லையெல்லாம் ஏற்படுவதில்லை. "பேப்பர் வெயிட்" என்றால் தமிழ்தானே என்று சொல்லிவிடுவார்கள்! என்னே நம் தமிழார்வம்! என்னே நம் தமிழ்ப்பற்று!

பல்கலைக்கழக அகராதியைப் புரட்டிப் பார்ப்பதற்கு முன்பு, ஒரு சில நண்பர்களை உசாவிப் பார்த்தேன். Paper Weight என்றால் "தாள் பளு" என்று சொன்னார்கள். அதன் பின்னர் தான் அந்த நண்பர்கள் அந்த அகராதியை நன்றாகப் படித்துள்ளார்கள் என்பது தெரிய வந்தது! ஏனென்றால் அந்த அகராதியும் "தாள் பளு" என்றே எடுத்துக் கூறுகிறது. பல்கலைக்கழகத்திலிருந்தே நண்பர் ஒருவர் வந்தார். அவரிடம் கேட்டபோது, அவர் சிறிதும் தயக்கமின்றி, "தாள் இருத்தி" என்று திருத்தமாகக் கூறினார்!

Newspaper என்று சொல்லும்போது "செய்தித்தாள்" என்று சொல்லுகின்றோம். Weights and Measures என்று சொல்லும்போது "எடைகளும் அளவைகளும்" என்று மொழிபெயர்க்கின்றோம். தாளும் எடையும் சேர்ந்து "தாள் எடை" என்றாலும் தடைபட்டுப் போகின்றது. எடைக்கு எடை தங்கம் கொடுத்தாலும்கூட, தாள் எடையை நாம் ஏற்கவியலாது! தாளும் பளுவும் சேர்ந்து "தாள் பளு" என்றாலும் "பளு" மிகுதியாக ஆகி விடுகின்றது! "தாள் இருத்தி" என்றாலும், நண்பர்கள் "நிறுத்துக" என்று கூறித் தடுத்துவிடக் கூடும்!

அண்மை ஆண்டுகளிலே Paper Weight மிகவும் தெரிந்த பொருளாக மாறிவிட்டது! புதுப்புது வகையான Paper Weightகள் கடைத் தெருக்களிலே காட்சி தருகின்றன! அவை அலுவலகங் களை அணிசெய்து நிற்கின்றன! எழுது பொருள் வகையைச் சேர்ந்த Paper Weight "தாள் பளு" என்னும் நிலையை இழந்து, போர்க்கருவி வகையிலே சேர்ந்துகொள்ளத் துடிக்கின்றது. Paper Weightஐப் படைக்கலமாகப் பயன்படுத்தும் "போர் வீரர்கள்", இதற்கொரு தமிழ்ச்சொல் கிடைக்கவில்லையே என்று ஏங்குகின்ற ஏக்க ஒலியும் நம் செவிகளில் கேட்கத்தான் செய் கின்றது!

தாளோடு எடையும் ஒட்டவில்லை! பளுவும் ஒட்ட மறுக் கின்றது! "நிருத்தி"யும் அதே நிலையிலே நிற்கின்றது! ஆகவே "தாள்" என்னும் சொல்லுக்குப் பதிலாக வேறொரு சொல்லை அமைக்கலாமே! பைந்தமிழ்ச் சாரதி பாரதி பாடியுள்ள பாட்டு ஒன்றினை இப்போது நினைவு கூர்வோம் :

"ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம்
ஆலைகள் வைப்போம் கல்விச் சாலைகள் வைப்போம்
ஓயுதல் செய்யோம் தலை சாயுதல் செய்போம்
உண்மைகள் சொல்வோம் பல வண்மைகள் செய்வோம்."

நல்ல மொழிபெயர்ப்பிற்காக நாம் தேடி அலையுங்கால், "நல்ல காகிதம் செய்வோம்" என்று நயமாக எடுத்துக் காட்டுகின்றார் பெருங்கவிஞர் பாரதியார். நாம் இப்போது கவிதை உலகில் காலடி வைத்துவிட்டோம்! எனவே "காகிதம்" என்னும் சொல்லோடு மோனையாக அமையும் இன்னொரு சொல் கருத்திலே பளிச்சிடுகின்றது!

"காப்பு" என்னும் சொல் பல்வேறு நுண்ணிய பொருள் களைத் தருகின்ற இனிய சொல். தமிழ்மொழியைக் காக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் மறத்தமிழராகிய நமக்கு, இது மகிழ்ச்சி யூட்டி எழுச்சி தரும் சொல்லாகும். இந்தச் சொல் குறிக்கும் எத்தனையோ பொருள்களிலே பின்வரும் பொருள்களை மட்டும் நோக்குவோம். "காப்பு = பாதுகாவல், காவலாயுள்ளது, காப்பு நாண்." "காப்புச் செய்தல்" என்றால், "ஓலைச் சுவடியைக் கட்டி வைத்தல்" என்று பொருளாகும். எட்டியே நின்றுகொண்டிருந் தோம். மொழிபெயர்ப்பு மிகவும் கிட்டவே உள்ளது. காகிதத்தைக் காத்து நிற்கும் ஒரு பொருள்தானே Paper Weight என்னும் "காகிதக் காப்பு".

Paper Weight = காகிதக் காப்பு.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## பண்டிதமணி கதிரேசனர் நூற்றாண்டு விழா

பண்டிதமணி கதிரேசனர் அவர்கள் தமிழுக்கும் சைவத்திற்கும் ஆற்றிய தொண்டுகள் மிகப் பல. அப் பெரியாரின் நூற்றாண்டு விழா, 23—10—81 அன்று தொடங்கி நடைபெற்று வருகின்றது. டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களைத் தலைவராகக் கொண்ட குழு வொன்று அமைக்கப்பெற்று, இவ் விழாவின் தொடக்கக்கோள் 23—10—81 அன்று மதுரை அரசர் முத்தையா மன்றத்தில் நிதி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தொடங்கி வைக்க, டாக்டர் அரசர் முத்தையா செட்டியார் அவர்கள் தலைமையுரை ஆற்ற முதுபெரும் புலவர் ச. தண்டபாணி தேசிகர், பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் ஆகியோர் பொருளுரை ஆற்ற, டாக்டர் தமிழண்ணல் நன்றி நவில இனிது முடிந்தது.

பண்டிதமணி அவர்கள் கழக நிறுவனர் உயர்திரு. திருவரங்கனர் அவர்களோடும், அவர்தம் இளவல் கழக ஆட்சியர் வ. சு. அவர்களோடும் நெருங்கிப் பழகியவர். கழக வளர்ச்சிக்கு உறுதுணை புரிந்தவர். கழகம் நடத்திய விழாக்களில் பங்கு கொண்டு உரையாற்றி யுள்ளார்.

பண்டிதமணி அவர்களின் வரலாற்றினைச் சுருக்கமாகவும் செம்மையாகவும் பெருமழைப்புலவர் பொ. வே. சோமசுந்தரனர் அவர்களைக் கொண்டு எழுதச் செய்து வெளியிட்டுள்ளது கழகத்திற்கும் பண்டிதமணி அவர்கட்கும் உள்ள தொடர்பின் மாண்பினை எடுத்துக்காட்டப் போதிய சான்றாகும்.

பண்டிதமணி அவர்கள் சமற்கிருதத்திலும் வல்லுநராய்த் திகழ்ந்தார். 'மண்ணியல் சிறுதேர்' என்னும் நூல் இவர்தம் வடமொழி தமிழாக்கத் திறனை நன்கு விளக்கவல்லது. அங்ஙனமே, சுக்கிரநீதி, சுலோசனை, உதயணன் சரிதம் முதலிய மொழி பெயர்ப்பு நூல்களையும் எழுதியுள்ளார். மற்றும் இவர்தம் கதிர்மணி விளக்கம், பல்வகை கட்டுரைகள் ஆகியனவும் சிறந்த நூல்களாகும்.

1881ஆம் ஆண்டு தோன்றி 1953ஆம் ஆண்டில் மறைந்த இப் பெரியார் தமது 73 ஆண்டுக் காலத்தில் ஆற்றிய அரும்பணிகள் பலவற்றை விளக்கப் 'பண்டிதமணி' என்னும் நூல் ஒன்றே போதுமானது.

## திரு. டி. எஸ். ஸ்ரீபால், டாக்டர் கே. கே. பிள்ளை ஆகியோர் நினைவுக் கூட்டம்

சென்னை நக்கீரர் கழகத்தின் சார்பில் 28—10—81 அன்று மாலை 6 மணிபளவில் பவழக்காரத் தெரு ஏ. ஆர். சி. பள்ளியில் பேராசிரியர் பூ. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.டி., பி.லிட். அவர்கள் தலைமையில், சமண சமய அறிஞர் "ஜீவபந்து" திரு. டி. எஸ் ஸ்ரீபால், வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் கே. கே. பிள்ளை ஆகியோர் இறையடி சேர்ந்தமை குறித்துப் புகழ் வணக்கம் செலுத்தும் கூட்டமொன்று நடைபெற்றது. திரு. கே. பக்தவத்சலம், திரு. அன்புப் பழம்நீ ஆகியோர் உரையாற்றினர்.

## மருத்துவர் மா. வேம்புலி அவர்கள் மறைவு

சித்த மருத்துவம் ஆங்கில மருத்துவம் இரண்டிலும் வல்லவரும், தீராத பல நோய்களைத் தீர்த்துப் புகழ் பெற்றவருமான டாக்டர் மா. வேம்புலி அவர்கள் 27—10—81 அன்று சென்னையில் காலமானார்கள். இவர் பிறந்த ஊர் சோழ நாட்டிலுள்ள ஆலூர் ஆகும். உக்கல் திருவேங்கடம் பிள்ளை அவர்களின் இளவலுமாவார் என்று திரு. மா. வே. மணி அறிவிக்கிறார்.

## நங்கநல்லூரில் கந்தர் சட்டி விழா

நங்கநல்லூர் "ஸ்டேட் பாங்க் காலனி" விரிவில் உள்ள சித்தி விநாயகர் திருக்கோயிலில் 28—10—81 முதல் 2—11—81 முடிய கந்தர் சட்டி விழா நடைபெற்றது. நாடோறும் திருப்புகழ் இன்னிசையும் திருப்புகழ்ப் பாடல் போட்டிகளும் நடைபெற்றன. சைவப் பிரசங்கமணி A. T. A. ஈஸ்வர் (AMNFSC AFICD (LON) ARSH (LON) அவர்களின் கந்த புராணத் தொடர் சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

## கார்த்திகை சோம வாரச் சொற்பொழிவுகள்

சென்னை இராயப்பேட்டை பாலசுப்பிரமணிய பக்தசன சபையின் கார்த்திகை சோம வாரச் சொற்பொழிவுகள் கார்த்திகைத் திங்களில் வரும் திங்கட்கிழமை தோறும் மாலை 6 மணி முதல் நடைபெறும். திருப்புகழ் சதுரர் தெய்வத் தமிழ்மணி ஆர். பாலசுப்பிரமணியம், பகாவித்துவான் பொன் சண்முகனார், அமுதமொழியரசு எம். என். சங்கரநாராயணன் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர். 14—12—81 இல் திருவிளக்கு வழிபாடு நடைபெறும்.

## முனைவர் உ. வே. சா. மாநிலக் கல்லூரி

சென்னை மாநிலக் கல்லூரிக்கு, அக் கல்லூரியிலேயே சிறப்புத் தமிழ்ப்பணி ஆற்றிய டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் அவர்களின் பெயரை இணைத்து "முனைவர் உ.வே.சா. மாநிலக் கல்லூரி" (Dr. U. V. Sa. Presidency College) எனப் பெயர் அமைக்கத் தமிழ்நாடு அரசு முன்வர வேண்டும் என்று காரைக்கால் திட்டக்குடியைச் சேர்ந்த திரு. பா. பொன்னுசாமி, எம்.ஏ., பி.எட். என்பவர் எழுதியுள்ளார். இவர் 1976-'78ஆம் ஆண்டுகளில் அக் கல்லூரியில் தமிழ் பயின்றதன் காரணமாக அக் கல்லூரியின்மீது பற்று மிகுதியும் உடையவர் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௬, ௬௫ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | S. சந்திரசேகரன், சென்னை-1 | 5—00 |
| ,, | பிரேமா—திரவியம் நடராசன் திருமணம் (18·10·81) | 5—00 |

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

# ‘செந்தமிழ்ச் செல்வி’

## வாழ்நாள் கையொப்ப வேண்டுகோள்

பேரன்புடையீர்,

வணக்கம். சீரிய இலக்கியத்திங்கள் ஏடான ‘செந்தமிழ்ச் செல்வி’ கடந்த 55 ஆண்டுகளாக இடையறாது இலக்கியத் தொண்டாற்றி வருகின்றது. தொடக்கமுதல் இதுநாள்வரை அவ்வக்காலத்தில் வாழ்ந்துவரும் தமிழ்ப்பேரறிஞர்களின் இலக்கியம், இலக்கணம், மொழியியல், வரலாறு, சமயம், தத்துவம் போன்ற பல்துறைக் கட்டுரைகளைச் ‘செந்தமிழ்ச் செல்வி’ தாங்கி வருகின்றது.

மறைத்திரு மறைமலையடிகளாரின் தனித்தமிழ்க் கொள்கையைத் தாங்கித் தமிழினத்துக்கு ஏற்றம் தரக்கூடிய பல்வகை ஆய்வுக்கட்டுரைகளைச் ‘செல்வி’ வெளியிட்டுள்ளது.

தமிழ் இனத்துக்கோ, மொழிக்கோ, நாட்டுக்கோ இடையூறும் இன்னலும் அரசாலும் மாற்றாராலும் ஏற்பட்ட போதெல்லாம் அவற்றைத் தடுத்து நிறுத்தியதுடன் அவ்வாறு தடுத்து நிறுத்திய தமிழன்பர்களுக்குப் படைக்கலமாகச் ‘செல்வி’ திகழ்ந்து வருகின்றது.

தமிழர்தம் மொழிக்காப்புப் படைக்கலனாகவும் இலக்கியப் பயிர் வளர்க்கும் செங்கழனியாகவும் திகழும் ‘செல்வி’யைப் போற்றி வளர்க்கவேண்டியது தமிழ்மக்கள் அனைவருடைய கடமையாகும்.

பல்வேறு வகையான பருவ ஏடுகள் மக்கள் உள்ளங்களைக் கவரும் வகையில் பொழுதுபோக்கான முறையில் வெளிவரும் இந்நாளில் இலக்கிய ஆய்வேடாகத் திகழும் ‘செல்வி’யை வாங்கிப்படிக்கும் உறுப்பினரின் தொகை குறைவாகும். 56 ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்றுவரினும் இத்தகைய ஏடுகளை வாங்குவோர் தொகை மிகக் குறைவாக உள்ளது.

இதுபோன்ற பிற ஏடுகளுக்கும் நம் நாட்டில் இந்நிலைதான் உள்ளது. இத்தகைய சூழலில் தமிழறிஞர்கள் ஆய்வின் ஊற்றுக் கண்ணாகத் திகழும் ‘செல்வி’க்கு வாழ்நாள் கட்டணம் செலுத்தி அதனை மேலும் ஊக்கப்படுத்தினால் இன்னும் பல அரிய பணிகளை அது தொடர்ந்து ஆற்ற இயலும்.

‘செந்தமிழ்ச் செல்வி’யின் வாழ்நாள் கையொப்பத்தொகை ரூ. 160/- ஆகும். இருப்பினும் 15–1–’82 வரை கையொப்பம் செலுத்துவோர்க்கு ரூ. 140/- மட்டுமே கையொப்பத்தொகையாகும். எனவே இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தமிழ்ப் பேரறிஞர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள், தமிழன்பர்கள் யாவரும் ‘செல்வி’யின் வாழ்நாள் உறுப்பினர்களாக வேண்டுமென்பது எம் விருப்பம்.

ஆசிரியர்.

பதிவு எண் 4899.